# நெரூர்

# ஸ்ரீ சதாசிவ பரஹ்மேந்திரர் அருளியவை



## தமிழ் விளக்கத்துடன்...

## பாகம் - 1

# நெரூர்
# ஸ்ரீ சதாசிவ ப்ரஹ்மேந்திரர் அருளியவை

## தமிழ் விளக்கத்துடன்

## பாகம்-1

தொகுத்தவர்:
திரு. பெரியசாமி அவர்கள்
கணக்கன்பட்டி
செல் : 96263 05269

அச்சிட்டோர்:

**சூர்யா பிரிண்டர்ஸ்**
81/1,செங்குந்தபுரம் 6வது கிராஸ், கரூர்-2.
போன்: 233740 செல்: 99429 33740.
e-mail: sooryaprint@gmail.com



நெரூர் ஸ்ரீசதாசிவ ப்ரஹ்மேந்திரர் அருளியவை

தமிழ் விளக்கத்துடன்


| | | |
|---|---|---|
| ★ தொகுத்தவர் | : | திரு. பெரியசாமி அவர்கள், கணக்கன்பட்டி. |
| ★ முதற்பதிப்பு | : | 2012 |
| ★ மூன்றாம் பதிப்பு | : | நவம்பர் 2013 |
| ★ நான்காம் பதிப்பு | : | நவம்பர் 2014 |
| ★ ஐந்தாம் பதிப்பு | : | ஜனவரி 2016 |
| ★ ஆறாம் பதிப்பு (பாகம்-1) | : | ஜனவரி 2017 |
| ★ ஏழாம் பதிப்பு (பாகம்-1) | : | ஜனவரி 2018 |
| ★ எட்டாம் பதிப்பு (பாகம்-1) | : | மே 2019 |
| ★ பக்கங்கள் | : | 92 |
| ★ விலை | : | ரூ.50.00 |





***Thiru. Periyasamy, Kanakkanpatti***

***Cell : 96263 05269***



Designed & Printed by:

***Soorya Printers,***

81/1, Sengunthapuram 6th Cross, KARUR-2.

e-mail: sooryaprint@gmail.com



**அதிஷ்டான முன்கோபுரம்**

(1941-ம் வருடம் எடுக்கப்பட்ட படம்)



**ஸ்ரீ சதாசிவ ப்ரஹ்மேந்திரர் ஜீவ சமாதி**

(1941-ம் வருடம் எடுக்கப்பட்ட படம்)

# ஸ்ரீ சதாசிவ ப்ரஹ்மேந்திராள்
# குருநாதர்



**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் 57வது பீடாதிபதி**

**ஸ்ரீ பரமசிவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் அதிஷ்டானம்**

**திருவெண்காடு**

*தமிழ் விளக்கம் எழுதியவர் கடிதம் :*

**திரு.K.பாலசுப்பிரமணியன்**

ஓய்வு பெற்ற கரூர் வைஸ்யா வங்கி மேலாளர்

எண்.28, கே.வி.பி. நகர்,

கரூர்-639 002.

செல் : 94877 14514

அன்புடையீர்,

பழனி வட்டம், கணக்கன்பட்டி கிராமத்தில் வாழ்ந்த சற்குரு பழனிச்சாமி சுவாமிகள் அவர்களின் தூண்டுதலாலும், நெரூர் சற்குரு சதாசிவ ப்ரம்மேந்திராள் ஆசீர்வாதத்துடனும் ஸ்ரீ சதாசிவப்ரம்மேந்திரர் அருளிய கீர்த்தனைகள், சிவமானசிக பூஜா, ஆத்மவித்யா விலாஸம் ஒன்றின் தமிழாக்கம் 1951ம் ஆண்டு ஸ்ரீ காம கோடி கோஸஸ்தானம் சென்னை அவர்களால் வெளியிட்ட நூலில் இருந்தும், சதாசிவ ப்ரம்மம் அருளிய ஆத்ம வித்யா விலாஸம் 2ம் தமிழாக்கம் ஸ்ரீ ஞானானந்தா நிகேதன் அவர்களால் 1995ம் ஆண்டு வெளியிட்ட பூஜ்ய ஸ்ரீ வித்யானந்த கிரி சுவாமிகள் அருளிய விளக்கத்திலிருந்து தொகுக்கப்பட்டது. முதல் பதிப்பு 2012ம் ஆண்டு பெரியசாமி கணக்கன்பட்டி என்ற த.பாலசுப்பிரமணியன் ஓய்வு மின்வாரிய இன்ஜினியரால் வெளியிடப்பட்டது.

தற்சமயம் சதாசிவ ப்ரம்மேந்திராள் சமஸ்கிருதத்தில் அருளிய மற்றுமுள்ள சில புத்தகங்களை தமிழாக்கம் செய்ய என்னைப் பணித்ததால் சற்குரு சதாசிவ ப்ரம்மத்தின் ஆசியுடன் (1) மனோநியமனம் 2) நவ வர்ண ரத்ன மாலா 3)ஸர்வ பாபஹர ஸ்தோத்ரம் என்ற புத்தகங்களை முடிந்தவரை தமிழாக்கம் செய்து சதாசிவ ப்ரம்மேந்திராள் அருளிய புத்தகம் இந்த 5ம் பதிப்பில் சேர்த்துள்ளேன். பக்தர்கள் இந்த புத்தகத்தை படித்து தாங்கள் இறையருளும், குருவருளும் பெறப் பிராத்திக்கிறோம்.

தங்களன்புள்ள...

**K.பாலசுப்பிரமணியன்**

# பொருளடக்கம்

ஓம் ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மணே நம;

# முன்னுரை

ஸ்ரீஸதாசிவ ப்ரஹ்மேந்த்ர ஸ்வாமிகள் காவேரி தீரத்தில் அவதரித்து பால்யத்திலே திருவிசைநல்லூரர் என்னும் கிராமத்திலேயுள்ள மஹாவித்வான்களிடம் வித்யாப்யாஸஞ் செய்தார்கள். பால்யத்திலே வேதாத்யயனமும், வேதாந்த விசாரமும் செய்தபின், யோகமார்க்கத்திலும் ஆத்ம ஜ்ஞானத்தை நாடும் வேதாந்த விசாரத்திலும் தமக்குத்தகுந்த குருஸ்ரீ பரமசிவேந்த்ர ஸரஸ்வதி அவர்களே என்று கருதி அவர்களுடைய மஹா ஸந்நிதானத்தில் அந்தேவாஸியாக பல ஆண்டுகள் இருந்தார்கள்.

இவர்கள் யோக ஸூத்ர வ்ருத்தி, ப்ரஹ்மஸூத்ர வ்ருத்தி என்னும் வ்யாக்யானங்களையும் வேறு சில பிரகரண க்ரந்தங்களையும் இயற்றி யருளினார்கள். ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர்கள் இயற்றிய ஸித்தாந்த லேஸஸங்க்ரஹத்தை யொட்டி ஸித்தாந்த கல்பவல்லீ என்னும் நூலையும் இயற்றியருளினார்கள். ஸ்ரீ பகவானையும் அத்வைத அநுபவங்களையும் பற்றி அநேக கீர்த்தனங்களை இயற்றினார்கள். இவையெல்லாம் தமது ஸ்ரீ குருமூர்த்திகளின் திருவருளாலேதான் என்பதை 'ஹம்ஸ' என்றும், பரம ஹம்ஸ என்றும் குருமுத்திரை வைத்துப் பாடிக் காட்டியிருக்கிறார்கள். 'ப்ரஹ்மைவாஹம் கில' என்னும் கீர்த்தனத்திலே ''ஸத்குருவின் கிருபையாலேயே ப்ரஹ்மம் வேறு, நான் வேறு' என்ற அஜ்ஞானத்தைக் கடந்து நானே ப்ரஹ்மமாய் இருப்பதை உணர்ந்தேன் என்று பாடியிருக்கிறார்கள். ஜீவஸ்வரூபத்தை நன்கு விளக்கும் 'தத்வஜ் ஜீவத்வம்' என்னும் கீர்த்தனத்திலும் பரம ஹம்ஸர்களான குரு மூர்த்திகளே அத்வைத ஜ்ஞானத்தை உபதேசித்து மாயையையும் அவித்யையும் நீக்கினார்கள் என்று விளக்கி யிருக்கிறார்கள். 'ஸ்ரீ பரம சிவேந்திரர்கள் சந்திரன், நான் எல்லையற்ற ஆனந்த ஸாகரம்: ஸாகரம் சந்திரனைக் கண்டு பொங்கி உத்கோஷிப்பதுபோல, குருமூர்த்திகளின் ஸந்நிதியில் ஆனந்தம் பொங்கி நான் சந்தோஷிக்கிறேன்' என்றும், தீரர்களான பரமசிவேந்திரர்கள் என்னும் குருமூர்த்திகளாலே போதிக்கப்பெற்று நான் அகண்ட ஸச்சிதானந்தப் பொருள் என்பதை உணர்ந்தேன்' என்றும், தமக்கு நேர்ந்த ப்ரஹ்மானுபவ சுகத்தைப் பற்றி 'ஆனந்த பூர்ண போதோஹம்' என்னும் இரண்டு கீர்த்தனங்களிலும் 'பூர்ணபோதோஹம்' என்னும் கீர்த்தனத்திலும் பாடியிருக்கிறார்கள். ஸ்ரீ ராமாவதார கிருஷ்ணாவதார தத்துவங்களையும் தான் குருமுகத்தாலே அறிந்ததாகப் பாடியுள்ளார்கள்.

ஸச்சிதானந்தப் பொருளே ஸ்ரீராமன், தஹராகாசமே ஸ்ரீ அயோத்யை, சாந்தியே வைதேஹீ, ராகத்வேஷாதிகளே அரக்கர்கள், அஜ்ஞானமே மஹா சமுத்திரம், அதனை ஆஞ்ஜனேயரை போலக் கடந்து செல்வதற்கு ஸ்ரீ ராமனாகிய பரப்ரஹ்மமே தாரகமாயுள்ளது' என்று ஸ்ரீமத் ராமாயணத்தின் வேதாந்தப் பொருளை விளக்கியுள்ளார்கள். சிவ மானஸிக பூஜா என்னும் சிறு நூலும் ஸகுண ப்ரஹ்மமாகிய பரமசிவனை, அத்வைத ஸித்தாந்தத்திற்கு அனுகுணமான சிறந்த முறையிலே உபாஸிப்பதற்கு ஏற்றதாக அமைந்துள்ளது. ஸர்வம் ப்ரஹ்ம மயம் என்னும் கீர்த்தனத்திலே

குறிக்கப்பெற்ற ஹம்ஸத்யானமே இவர்களுக்கு ஆசார்யர்களால் உபதேசிக்கப்பெற்றதுபோலும்.

ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்த்ரர்களுக்கு சாஸ்திரப் பயிற்சியும், ஸத்குருவின் உபதேசமும் கிடைத்ததும், அத்வைத ஜ்ஞானம் அனுபவ ஸித்தமாயிற்று. ஸ்ரீ குருமூர்த்திகளின் மஹாஸந்நிதானத்திற்கு வரும் சாஸ்திரஜ்ஞர்களோடு இவர்கள் அடிக்கடி தர்க்கஞ் செய்வதைக் கண்ட ஸ்ரீ குருமூர்த்திகள் ஒரு சமயம் 'மௌனியாயிரு' என்று ஆஜ்ஞை செய்தார்களாம்: அது முதற்கொண்டு இவர்கள் மஹா மௌனிகளாகவே விளங்கினார். குருமூர்த்திகளிடத்தில் அனுபவ பூர்வகமாய்க் கண்டறிந்த ஞானவிலாஸங்களைக் கொண்டே, இவர்கள் ஆத்மஜ்ஞானியின் பரமலக்ஷணங்களை 'ஆத்ம வித்யாவிலாஸ:' என்னும் நூலிலே மிக அழகாக வர்ணித்துள்ளார்கள். இந்த ஞான விலாஸங்கள் அனைத்தும் இவர்களிடமும் காணப்பெற்றன. சிவ மானஸிக பூஜையின் பயனாக சந்திரமௌளீசுவரரின் க்ருபையைப்பெற்றும் குருமூர்த்திகளின் உபதேசங்களின்படி நடந்தும் அவர்களுடைய பாதுகைகளைச் சிரமேற்கொண்டு எல்லாச் சிந்தைகளும் சங்கைகளும் நீங்கப்பெற்று சமம், தமம், கருணை முதலிய நற்குணங்களால் நிரம்பியவராகி, இந்திரியங்களை ஒடுக்கியும், காமங்களையெல்லாம் வென்றும், உள்ளங்கையை பிக்ஷாபாத்திரமாகக் கொண்டு அவதூத ஸந்நியாஸிகளாக எங்கும் திரிந்தும், காவேரி மணல்மேடுகளிலும் கரையோரத்துப் புதர்களிலும், மரத்தடியிலும் அமர்ந்தும், ஸர்வத்ர ஸதா ஹம்ஸத்யானத்திலேயே ஆழ்ந்திருந்தார்கள். இவர்களுடைய புகழ் நாடெங்கும் பரவிற்று!

இவர்களைப்பற்றிப் பல அற்புதங்கள் கர்ண பரம்பரையாகக் கூறப்படுகின்றன. ஜடபரதரைப்போலத் திரிந்த இவர்களுடைய தலைமேலே ஒருசமயம் விறகுக்கட்டு ஒன்று சுமத்தப்பட்டதாம். வேறொரு சமயம் நெற்குவியலின்மேல் மெய்மறந்து படுத்திருந்த இவர்களைத் திருடனாகக் கருதி அடிக்க வந்தார்களாம். அடிக்க ஓங்கின கைகள் ஸ்தம்பித்து நின்றனவாம். இன்னொரு சமயம், கொடுமுடிக்கருகே காவேரி மணல் மேட்டிலே ஹம்ஸத்யானத்திலமர்ந்திருந்த இவர்களை புது வெள்ளம் புரட்டிக்கொண்டு போய் சிறிது தூரத்தில் மணலுள் செருகிவிட்டதாம். மூன்று மாதத்திற்குப் பின்பு, இவர்களுடைய தேஹம் அத்ருஷ்ட வசத்தால் தோண்டியெடுக்கப் பெற்றபோது, யாதுமறியாதவர்களாய் தியானத்திலிருந்து எழுந்து சென்றார்களாம். மற்றொரு சமயம், கோயில் கர்ப்பக்ருஹத்திற்கு வெளியிலே நின்று கொண்டு இவர்கள் சிவநாமாவளி அர்ச்சனையை உச்சரித்தபோது, ஒவ்வொரு நாமத்திற்கும் ஒரு பூ மூலஸ்தான லிங்கத்தின் மீது உதிர்ந்ததாம்.

ஒரு தடவை இவர்களுடைய கை மிலேச்சனால் வெட்டப்பட்ட போதும் இவர்கள் அதை உணரவில்லையாம். அதைக் கண்டு பயந்த மிலேச்சன் இவர்களைத் தொடர்ந்து சென்று மன்னிப்பு வேண்டிய போதுதான் விஷயம் தெரிந்ததாம்; அப்பொழுதும் அந்த மிலேச்சனிடம் கருணையே காட்டினார்களாம். இவர்களைத் தரிசித்தவர்கள் அனைவரும்

பரிசுத்தர்களாகி தாங்கள் விரும்பிய பலன்களையெல்லாம் உடனே பெறுவார்களாம். விக்னேச்வரரை உபாஸித்தும் நீங்காத இடையூறு இவர்களை ஸ்மரிப்பதாலே நீங்கிவிடும் என்று ஸதாசிவேந்த்ர ஸ்துதியிலே கூறப்பெற்றுள்ளது.

ஒரு சமயம் மதுரையிலே நடந்த ரிஷபவாஹன மஹோத்ஸவத்திற்கு காவேரிக் கரையில் ஊரிலே விளையாடிக் கொண்டிருந்த சிறு பிள்ளைகளை கண்மூடித்திறக்கும் நேரத்திற்குள் ஆகாய மார்க்கமாக அழைத்துக் கொண்டுபோய் ஸ்வாமி தர்சனம் செய்வித்து பக்ஷணங்களை வாங்கிக் கொடுத்துத் திரும்பவும் ஊரிலே கொணர்ந்து விட்டார்களாம். மேலும் ஒரே சமயத்தில் வெவ்வேறு தேவாலயங்களிலே இவர்கள் ஸ்வாமி தர்சனம் செய்து கொண்டிருப்பதாகக் காணப் பட்டார்களாம். இவற்றையும் வெட்டுண்ட கை மீண்டும் ஒட்டிக் கொண்டதையும், இவர்களுடைய யோக ஸித்திகளுக்கு நிதர்சன மாகக் கூறுவதுண்டு!

இவர்கள் இப்படி வெகுகாலம் ஜீவந்முக்தர்களாய் அத்வைத ஸித்தாந்தத்தை மெய்ப்பிக்கும் சிறந்ததோர் நிதர்சனமாய், ஸச்சிதானந்தமான சுத்த ப்ரஹ்மமாகவே விளங்கினார்கள். இவர்கள் அருளிய கீர்த்தனங்களிலும் இதர கீர்த்தனங்களிலும் காணும் ப்ரஹ்ம லக்ஷணங்கள் யாவும் இவர்களிடம் காணப்பெற்றனவாதலால் இவர்கள் ஸதாசிவ ப்ரஹ்மம் என்று பிரஸித்தி பெற்றார்கள். இவர்கள் முன்னதாகவே அறிவித்த பிரகாரம், தக்ஷிண வாஹினியாக ப்ரவஹிக்கும் காவேரியின் மேற்கரையிலே நெரூரிலே கிழக்கு நோக்கி ஸமாதி கொண்டருளினார்கள்.

ஸதாசிவப் ப்ரஹ்மத்தின் கருணையைப் பெற்றால் காமியும் எல்லாக் காமங்களையும் வென்றவனாவான். கொடியவனும் பரமசாந்தனாவான். அறிவீனனும் பேரறிவாளனாவான் என்பது ஆன்றோர் வாக்கு. ஆதலால் ஸதாசிவ ப்ரஹ்மத்தை அடிவணங்கியும் அவர்களுடைய திருவாக்குகளைப் பயின்றும் கீர்த்தனங்களைப் பாடியும் நாம் அனைவரும் அஜ்ஞானம் நீங்கப்பெறுவோமாக.

சதாசிவப்ரம்மம் எழுதிய நூல்கள் எல்லாம் சமஸ்கிருதத்தில் இருப்பதால் தமிழ் நாட்டு மக்கள் அறிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தாலேயே இந்த நூல் வெளியிடப்படுகிறது. சதாசிவம் அருளிய கீர்த்தனைகள், சிவமானசிக பூஜா, ஆத்ம வித்யா விலாஸம் 1ன் தமிழாக்கம் 1951ம் ஆண்டு ஸ்ரீ காமகோடி கோஸஸ்தானம் சென்னை அவர்களால் வெளியிடப்பட்ட நூலில் ஸ்ரீ வே.நாராயணன் எம்.ஏ.,எம்.எல்., செய்த தமிழாக்கத்திலிருந்து தொகுக்கப்பட்டது ஆகும். சதாசிவம் அருளிய ஆத்மவித்யா விலாஸம் IIன் தமிழாக்கம் ஸ்ரீஞானானந்தா நிகேதன் அவர்களால் 1995ம் ஆண்டு வெளியிட்ட பூஜ்ய ஸ்ரீ வித்யானந்த கிரி ஸ்வாமிகள் அருளிய விளக்கத்திலிருந்து தொகுக்கப்பட்டது ஆகும்.

**பெரியசாமி**
கணக்கன்பட்டி.

உ

ஸ்ரீ சதாசிவ ப்ரஹ்மம் துணை

# ஸ்ரீ சதாசிவ ப்ரஹ்மேந்த்ரர் அருளிய கீர்த்தனங்கள்

## 1) கல்யாணி ராகம் ; ஆதிதாளம் ; பஜரே கோபாலம்

பல்லவி

பஜரே கோபாலம் மானஸ (பஜ)

சரணம்

பஜகோபாலம் பஜித குசேலம்
த்ரிஜகன் மூலம் திதிஸுத காலம் (பஜ)

ஆக மஸாரம் யோக விசாரம்
போக சரீரம் புவனா தாரம் (பஜ)

கதன கடோரம் கலுஷவி தூரம்
மதன குமாரம் மதுஸம்ஹாரம் (பஜ)

நத மந்தாரம் நந்த கிசோரம்
ஹதசாணூரம் ஹம்ஸவிஹாரம் (பஜ)

**விளக்கம்:**

கோபாலனை வணங்குவாய் மனமே! கோபாலனை வணங்குவாய்! குசேலரால் பூஜிக்கப்பெற்றவனும், மூன்று உலகங்களுக்கும் மூல காரணமானவனும், அசுரர்களுக்கு எமனாயிருப்பவனுமான கோபாலனை வணங்குவாய்! வேதங்களின் உட்பொருளானவனும், யோகத்தால் ஆராய்ந்த பொருளானவனும், ஆனந்த மயமான சரீரத்தை கொண்டவனும், உலகத்தை தாங்குபவனுமான கோபாலனை வணங்குவாய் !

பாவங்களை விரைந்து போக்குபவனும், மனக்கலக்கத்தை நீக்குபவனும் மன்மதனைக்குமாரனாக உடையவனும், மது என்னும் அரக்கனை அழித்தவனுமான கோபாலனை வணங்குவாய்!

வணங்குவோருக்கு மந்தாரமென்னும் கல்ப விருட்சமானவனும், நந்த கோபனுக்கு குழந்தையானவனும், சாணூரன் என்னும் மல்லனைக் கொன்றவனும், அன்னங்களோடு விளையாடுபவனுமான கோபாலனை வணங்குவாய்!.

## 2) காபி ராகம் ; ஆதி தாளம் ; ஸ்மர வாரம் வாரம்

பல்லவி

ஸ்மர வாரம் வாரம் சேத:
ஸ்மர நந்த குமாரம் (ஸ்மர)

சரணம்

கோஷ குடீர பயோக்ருத சோரம்
கோகுல ப்ருந்தாவன ஸஞ்சாரம் (ஸ்மர)

வேணுரவா ம்ருதபான கடோரம்
விச்வஸ்திதி லய ஹேது விஹாரம் (ஸ்மர)

பரமஹம்ச ஹ்ருத் பஞ்சரகீரம்
படுதர தேனுக பக ஸம்ஹாரம் (ஸ்மர)

**விளக்கம்:**

மனமே! அடிக்கடி நந்தகோபாலன் பிள்ளையான கிருஷ்ணனை நினைவு செய்!

இடையர் குடிசையிலே பாலையும், நெய்யையும் களவாடியவனும், கோகுலம் விருந்தாவனம் இவ்விடங்களிலே திரிந்தவனுமான கிருஷ்ணனை நினைவு செய்! புல்லாங் குழலோசையாகிய அமுத பானத்தால் மகிழ்விப்பவனும், உலகனைத்தையும் நிலை பெறச் செய்தல், அழித்தல், ஆக்கல் ஆகியவற்றிற்கு காரணமான விளையாட்டுக்களை உடையவனுமான கிருஷ்ணனை நினைவு செய்!

பரம ஹம்சர்களின் இதயமாகிற கூட்டிலேயுள்ள கிளி போன்றவனும், பலிஷ்டர்களான தேனுகாசூரன், பகாசூரன் இவர்களை அழித்தவனுமாகிய கிருஷ்ணனை நினைவு செய்!.

## 3) சுருடி ராகம்; ஆதிதாளம்; ப்ருஹிமுகுந்தேதி

பல்லவி

ப்ருஹி முகுந்தேதி ரஸனே (ப்ருஹி)

சரணம்

கேசவ மாதவ கோவிந்தேதி
கிருஷ்ணானந்த ஸதாநந்தேதி (ப்ருஹி)

ராதா ரமண ஹரே ராமேதி
ராஜீ வாக்ஷ கனச்யா மேதி (ப்ருஹி)

கருட கமன நந்தகஹஸ்தேதி
கண்டித தசகந்தர மஸ்தேதி (ப்ருஹி)

அக்ரூரப்ரிய சக்ரதரேதி
ஹம்ஸ நிரஞ்சன கம்ஸஹரேதி (ப்ருஹி)

**விளக்கம்:**

முகுந்தனே! என்று சொல்லு நாக்கே! முகுந்தனே என்று சொல்லு! கேசவனே மாதவனே கோவிந்தனே என்றும், கிருஷ்ணனே! ஆனந்த மயனே! எப்பொழுதும் ஆனந்தமுடையவனே! என்றும் சொல்லு நாக்கே!

ராதையின் காதலனே! ஹரியே! இராமனே! என்றும், தாமரை கண்ணா! மேகம் போன்ற கருநிறமுடையவனே! என்றும் சொல்லு நாக்கே!. கருடனில் ஏறிச் செல்வோனே! நந்தகமென்னும் வாளை கையிற் கொண்டவனே! இராவணனுடைய தலைகளை வெட்டி எறிந்தவனே! என்றும் சொல்லு நாக்கே! அக்ரூரருக்கு நண்பனே! திருச்சக்கரத்தை ஏந்தியவனே! என்றும் ஹம்ஸம் போல மாசற்றவனே! கம்ஸனைக் கொன்றவனே என்றும் சொல்லு நாக்கே!

## 4) நவ்ரோஜ் ராகம்; ஆதிதாளம்; மானஸ சஞ்சரரே

பல்லவி

மானஸ ஸஞ்சர ரே ப்ரஹ்மணி (மானஸ)

சரணம்

ஸ்ரீ ரமணீ குச துர்க்கவிஹாரே
ஸேவக ஜனமந் திரமந்தாரே (மானஸ)

மதஸிகி பிஞ்சா லங்க்ருத சிகுரே
மஹனீய கபோ லவிஜித முகுரே (மானஸ)

பரம ஹம்ஸமுக சந்த்ர சகோரே
பரிபூரித முரளீ ரவதாரே (மானஸ)

**விளக்கம்:**

அடமனமே! உலாவுவாய். பிரம்மத்தினிடம் அட மனமே! உலாவுவாய். ஸ்ரீ தேவி என்னும் காதலியின் கொங்கைகளாகிய மலையரண்களிலே இன்புறுவதாயும், அடியார்களுக்கு வேண்டியவற்றை யெல்லாம் தரும் ஐந்து கல்பக விருக்ஷங்களிலும் சிறந்த மந்தார விருக்ஷமாயும் உள்ள பிரம்மத்தினிடம் அடமனமே உலவுவாய்!. கர்வங்கொண்ட மயிலின் தோகையைத் திருமுடியிலே அலங்காரமாக அணிந்து கொண்டதும், கண்ணாடியை வென்று சிறப்பு வாய்ந்த கன்னங்களை உடையதுமான பிரம்மத்தினிடம் அடமனமே உலவுவாய்! பரமஹம்சர்களின் முகங்களாகிய சந்திரர்களைக் கண்ணாற்பருகும் சகோர பக்ஷியாயும் முரளி என்னும் குழலிலிருந்து ஓசை தாரையாகப் பெருகுவதாயுமுள்ள பிரம்மத்தினிடம், அடமனமே உலாவுவாய் !

## 5) குந்தல வராளி ராகம்; ஆதி தாளம்; காயதிவனமாலீ

பல்லவி

காயதி வனமாலீ மதுரம் (காயதி)

சரணம்

புஷ்பஸு கந்தஸு மலயஸமீரே
முனிஜன ஸேவித யமுனா தீரே (காயதி)

கூஜிதசுகபிக முக கககுஞ்சே
குடிலாலகபஹு நீரதபுஞ்சே (காயதி)

துளஸீ தாம விபூஷணஹாரீ
ஜலஜபவஸ்துத ஸத்குண சௌரீ (காயதி)

பரமஹம்ஸ ஹ்ருத யோஸ்த வகாரீ
பரிபூரிதமுர ளீரவதாரீ (காயதி)

**விளக்கம்:**

வனமாலையை யணிந்த கிருஷ்ணன் பாடுகிறான்; இனிதாய் கிருஷ்ணன் பாடுகிறான். பூக்களின் நறுமணத்தோடு கூடினதாகி, மலைய மலையினின்று வீசும் தென்றலையுடையதாய் முனிவர்கள் சென்று சேரும் யமுனைக் கரையினிலே பாடுகிறான். கிளி, குயில் முதலான பறவைகள் கூவும் தோட்டங்களையுடையதும், நெற்றி மேலே படியும் சுருட்டை மயிர் போன்ற பல மேகங்கூட்டங்களையுடையதுமான யமுனைக் கரையினிலே பாடுகிறான். துளசி மாலையை அணியாகக் கொண்டு மனதை கவர்கின்றவனாய், தாமரையில் பிறந்த பிரமனால் துதிக்கப்பெற்ற நற்குணங்களையுடைவனாய், சூர வம்சத்தில் அவதரித்த கிருஷ்ணன் பாடுகிறான். பரமஹம்ஸர்களின் இருதயங்களை களிப்புறச் செய்வோனும், முரளி என்னும் புல்லாங்குழலிலே நிரப்பப் பெற்று தாரையாக பெருகும் குழலோசையை உடையவனுமான கிருஷ்ணன் பாடுகிறான்.

## 6) ஸுருடி ராகம்; ஆதி தாளம்; க்ரீடதி வனமாலீ

பல்லவி

க்ரீடதி வனமாலி கோஷ்டே (க்ரீடதி)

சரணம்

ப்ரஹ்லாத பராசர பரிபாலீ
பவனாத்மஜ ஜாம்பவதனு சூலீ (க்ரீடதி)

பத்மாகுச பரிரம்பண ஸாலீ
படுசரசா ஸிதமாலி ஸுமாலி

பரம ஹம்ஸ வரகுஸும ஸுமாலீ
ப்ரணவ பயோருஹ கர்ப்ப கபாலீ (க்ரீடதி)

**விளக்கம்:**

வனமாலையைப் பூண்ட கிருஷ்ணன் விளையாடுகிறான். தொட்டிலில் வனமாலை யணிந்த கிருஷ்ணன் விளையாடுகிறான். ப்ரஹலாதர், பராசரர் இவர்களைப் பரிபாலித்தவன் வாயுகுமாரரான

ஆஞ்சநேயருக்கும், ஜாம்பவானுக்கும் அனுகூலஞ்செய்தவன் விளையாடுகிறான். ஸ்ரீதேவியின் ஸ்தனங்களை தழுவுவோனும், ஸ்ரீ ராமனாகி மாலி, ஸுமாலி என்னும் அரக்கர்களை நல்ல அம்புகளால் அழித்தவனுமான விஷ்ணு விளையாடுகிறான். பரமஹம்ஸ சிரேஷ்டர்களாகிய புஷ்பங்களை நல்ல மாலையாய் கொண்டவன், பிரணவ மென்னும் தாமரைகளின் மத்தியில் மூடப் பெற்று மறைந்திருப்பவனாய் விளையாடுகிறான்.

## 7) ஸாவேரி ராகம்; ஆதி தாளம்; பஜரே யது நாதம்

பல்லவி

பஜரே யதுநாதம் மானஸ
பஜரே யதுநாதம் (பஜரே)

சரணம்

கோபவதூபரி ரம்பண லோலம்
கோபகி சோரக மத்புத லீலம் (பஜரே)

கபடாங்கீ க்ருத மானுஷ வேஷம்
கபட நாட்ய க்ருத குத்ஸித வேஷம் (பஜரே)

பரமஹம்ஸ ஹ்ருத்தத்வ ஸ்வரூபம்
ப்ரணவ பயோதர ப்ரணவ ஸ்வரூபம் (பஜரே)

**விளக்கம்:**

யது வம்சத்திற்கு தலைவனான கிருஷ்ணனை வழிபடுவாய்! அடமனமே! கிருஷ்ணனை வழிபடுவாய்!. கோபிகளை தழுவுவதிலே ஆசை கொண்டவனும், அற்புதமான திருவிளையாடல்களையுடையவனும், நந்த கோபனுடைய குழந்தையுமான கிருஷ்ணனை வழிபடுவாய்!. வஞ்சனையால் மானுட வேஷத்தை ஏற்றுக்கொண்டவனும், வஞ்சனையாக நடிக்கும் நாட்டியத்திலே முழுதும் அழகிய வேஷத்தை போட்டுக் கொண்டவனுமான கிருஷ்ணனை வழிபடுவாய்!. பரமஹம்ஸர்களின் இருதயத்திலே உண்மை வடிவாயிருப்பவனும், விஷ்ணுவாகிய நீருண்ட மேகத்துடன் ஓங்கார வடிவாயிருப்பவனுமான கிருஷ்ணனை வழிபடுவாய்!.

## 8) மோஹன ராகம்; ஆதி தாளம்; பஜரே ரகுவீரம்

பல்லவி

பஜரே ரஹு³வீரம் மானஸ
பஜரே பஹு³ தீரம் (பஜரே)

சரணம்

அம்புத டிம்ப விடம்பன காத்ரம்
அம்புத வாகன நந்தன தாத்ரம் (பஜரே)

குஶிகஸு தார்ப்பித கார்முகவேதம்

வஸிஷ்ஹ்ருத் தயாம்புஜ பாஸ்கர பாதம் (பஜரே)

குண்டல மண்டன மண்டித கர்ணம்
குண்டலி மஞ்சக மத்புத வர்ணம் (பஜரே)

தண்டித சுந்த சுதாதிக வீரம்
*மண்டித மனுகுல மாஸ்ரய ஸௌரிம்* (பஜரே)

பரமஹம்ஸ மகிலாகம வேத்யம்
பரமவேத மகுடப்ரதி பாத்யம் (பஜரே)

<u>**விளக்கம்:**</u>

ரகு வம்சத்து வீரனான ஸ்ரீராமனை வழிபடுவாய்! அடமனமே! மிகுந்த தீரமுடைய ஸ்ரீராமனை வழிபடுவாய்! மேகக்கன்றையொத்த திருமேனியையுடையவனும், மேகத்தை வாகனமாக கொண்ட இந்திரனுடைய மகனான வாலிக்கு அரிவாளானவனுமான ஸ்ரீராமனை வழிபடுவாய். குசிக முனிவரின் புத்திரரான விசுவாமித்திரரால் தனுர் வேதத்தைத் தன்னிடம் ஸமர்ப்பிக்கப்பெற்றவனும், இந்திரியங்களை வசப்படுத்தியவர்களின் இருதயங்களாகிய தாமரைகளுக்குச் சூரியனாக அமைந்த பாதங்களையுடையவனுமாக ஸ்ரீராமனை வழிபடுவாய்!. திருக்குண்டலங்களாகிய அணிகளை அணிந்த திருச்செவிகளை யுடையவனும், அற்புதமான நிற முடையவனும், குண்டலி என்னும் ஆதாரத்தை கட்டிலாகக் கொண்டிருப்பவனுமாக ஸ்ரீராமனை வழிபடுவாய்! ஸுந்தன் மகனான மாரீசன் முதலானவர்களைத் தண்டித்தவீரனும், மனுவின் குலத்தை விளங்கச் செய்தவனுமாய், (சரணடைவதற்குரிய) புகலிடமான விஷ்ணுவை வழிபடுவாய். பரமஹம்ஸனாய் எல்லா ஆகமங்களாலேயும் அறியத் தக்கவனாய் வேதங்களுக்கு மகுடங்களான சிறந்த உப நிஷத்துக்களிலே நன்றாக அறிவிக்க பெற்றவனுமான ஸ்ரீராமனை வழிபடுவாய்.

## 9) காம்போதி ராகம்; த்ரிபுடி தாளம்; ப்ரதிவாரம் வாரம்

பல்லவி

ப்ரதிவாரம் வாரம் மானஸ பஜரே ரகுவீரம் (ப்ரதி)

சரணம்

காலம்போ தர காந்தஸரீரம்
கௌஸிகஸுக ஸௌனக பரிவாரம் (ப்ரதி)

கௌஸல்யா தஸரத ஸுகுமாரம்
கலிகல்மஷாய கஹன குடாரம் (ப்ரதி)

பரம ஹம்ஸஹ்ருத் பத்ம விஹாரம்
ப்ரதிஹத தஸமுக பலவிஸ்தாரம் (ப்ரதி)

**விளக்கம்:**

அடிக்கடி ரகுவீரரான ஸ்ரீராமனை வழிபடுவாய்! அட மனமே!. காள மேகத்தைப் போல் விரும்பத்தக்க திருமேனியையுடையவனும், கௌசிகர், சுகர், சௌனகர் ஆகியவர்களால் சூழப்பெற்றவனுமான ரகு வீரனை வழிபடுவாய்!. கோசலைக்கும், தரசரதனுக்கும் வாய்த்த நல்ல குமாரனும், கலிகாலத்துப் பாபங்களைக் கொண்ட அச்சம் என்னும் காட்டையழிக்கும் கோடாரி போன்றவருமான ரகுவீரனை வழிபடுவாய்! பரமஹம்சர்களின் இருதயங்களாகிய தாமரைகளிலே விளையாடு கின்றவனும் தசமுகனான இராவணனுடைய பெருஞ்சேனையை யழித்தவனுமான ரகுவீரனை வழிபடுவாய்!.

## 10) ஸுருடி ராகம்; ஆதி தாளம்; சேத: ஸ்ரீராம்

**பல்லவி**

**சேத: ஸ்ரீராமம் சிந்தய**
**ஜீமுதஸ் யாமம் (சேத)**

**சரணம்**

**அங்கீக்ருத தும்புரு ஸங்கீதம்**
**ஹனுமத் கவயக வாக்ஷ ஸமேதம் (சேத)**

**நவரத்ன ஸ்தாபித கோடீரம்**
**நவதுளஸீதள கல்பித ஹாரம் (சேத)**

**பரமஹம்ஸ ஹ்ருத் கோபுரதீபம்**
**சரண தளித முனிதருணீ சாபம் (சேத)**

**விளக்கம்:**

மனமே! மேகத்தை போன்ற கரிய நிறமுடைய ஸ்ரீராமனை நினை! தும்புருவின் ஸங்கீதத்தை ஏற்றுக் கொண்டவனும், ஹனுமான், கவயன், கவாக்ஷன் ஆகியவானரங்களோடு கூடியவனுமான ஸ்ரீராமனை நினை! நவரத்னங்கள் பதித்த கிரீடத்தை யுடையவனும், துளசியின் இளந்தளிர்களால் அமைத்த மாலையையுடையவனுமான ஸ்ரீராமனை நினை!. முனிவரின் பத்தினியாகிய அகல்யையின் சாபத்தைப் போக்கிய திருவடிகளையுடையவனும், பரமஹம்ஸர்களின் இருதயங்களாகிய கோபுரங்களில் இட்ட தீபம்போன்றவனுமான ஸ்ரீராமனை நினை!

## 11) ஜஞ்சோடி ராகம்; ஆதி தாளம்; பிபரே ராம ரஸம்

**பல்லவி**

**பிபரே ராம ரஸம் ரஸனே (பிபரே)**

**சரணம்**

தூரீ க்ருத பாதக ஸம்ஸர்க்கம்
பூரித நாநாவித பல வர்க்கம் (பிபரே)

ஜனன மரண பயஸோக விதூரம்
ஸகல ஸாஸ்த்ர நிகமாகம ஸாரம் (பிபரே)

பரிபாலித ஸரஸிஜ கர்ப்பாண்டம்
பரம பவித்ரீ க்ருத பாஷண்டம் (பிபரே)

சுத்த பரமஹம் ஸாஸ்ரம கீதம்
சுகசௌனக கௌஸிக முகபீதம் (பிபரே)

**விளக்கம்:**

ராம என்னும் அமுதத்தை பருகுவாய்! ஏ நாக்கே! ராமாமிர்தத்தை பருகுவாய்! பாவங்களின் சம்பந்தத்தைப் போக்குவதாயும் பல வேறு விதமான பழரஸத்தால் பக்தர்களுக்கு உதவுவதற்காக தன்னுள்ளே நிரப்பி வைத்துக்கொண்டிருப்பதுமான ராமாமிர்தத்தை பருகுவாய்! பிறப்பு, இறப்பு, அச்சம், துன்பம் இவற்றை போக்குவதும் ஆகமம் என்னும் எல்லா சாஸ்திரங்களிலும் ஸாரமாகவுள்ளதுமான ராமாமிர்த்தை பருகுவாய்! பிரும்மாண்டங்களைப் பாதுகாப்பதும், பாஷண்டர்களையும் பரம பாவனர்களாகச் செய்வதுமான ராமாமிர்தத்தை பருகுவாய்!. சுகர், சௌன கர், கௌசிகர், முதலியோர் பருகியதும் பரிசுத்தர்களான பரமஹம்ஸர் களின் ஆசிரமங்களிலே பாடப்பெற்றதுமான ராமாமிர்தத்தை பருகுவாய்!

## 12) அடாணா ராகம்; ஆதி தாளம்; கேலதி மம ஹ்ருதயே

பல்லவி

கேலதி மம ஹ்ருதயே ராம : (கே)

சரணம்

மோஹ மஹார்ணவ தாரக காரீ
ராகத் வேஷ முகாஸுர மாரி (கே)

சாந்தி விதேஹ ஸுதா ஸஹ சாரீ
தஹரா யோத்யா நகர விஹாரீ (கே)

பரமஹம்ஸ ஸாம்ராஜ்யோத்தாரீ
ஸத்யக்ஞானாநந்த ஸரீரீ (கே)

**விளக்கம்:**

என் மனத்திலே விளையாடுகிறான்! இராமன்! என் மனத்திலே விளையாடுகிறான்!.

மோஹம் என்னும் பெருங்கடலைக் கடந்து செல்லச் செய்கிறவனும், விருப்பு, வெறுப்பு முதலான அசுரர்களைக் கொன்றழிப்பவனுமான இராமன் விளையாடுகிறான்.

மனச்சாந்தி என்னும் ஜனக குமாரியை மனைவியாகக் கொண்டு

இருதயாகாசம் என்னும் வெல்லவொண்ணாத அயோத்தி நகரிலே மகிழ்ந்திருப்பவனான இராமன் விளையாடுகிறான்!
பரமஹம்ஸர்களின் ஸாம்ராஜ்யத்தை நிலை நிறுத்துகிறவனும், ஸத்யம், ஞானம், ஆனந்தம் என்பவற்றை தனக்கு சரீரமாகக் கொண்டவனுமான இராமன் விளையாடுகிறான்.

## 13) தோடி ராகம்; ஆதி தாளம்;

கேலதி பிண்டாண்டே (அல்லது) கேலதி பிரம்ஹாண்டே

(பிரம்ஹாண்டே என்றும் பாடுவர்)

பல்லவி

கேலதி பிண்டாண்டே பகவான் (கே)

சரணம்

ஹம் ஸஸ்ஸோஹம் ஹம்ஸஸ்ஸோஹம்
ஹம்ஸஸ்ஸோஹம் ஸோஹமிதி (கே)

பரமாத்மாஹம் பரிபூர்ணோஹம்
ப்ருஹ்மைவாஹம் அஹம்ப்ருஹ்மேதி (கே)

த்வக் சக்ஷு ச்ருதி ஜிஹ்வா க்ராணே
பஞ்சவித ப்ராணோபஸ்தானே (கே)

ஸப்த ஸ்பர்ஸ ரஸாதிகமாத்ரே
ஸாத்விக ராஜஸ தாமஸமித்ரே (கே)

புத்திமன ஸ்சித்தாஹங் காரே
பூஜல தேஜோ ககன ஸமீரே (கே)

பரம ஹம்ஸ ரூபேண விஹர்த்தா
ப்ருஹ்ம விஷ்ணு ருத்ராதிக கர்த்தா (கே)

**விளக்கம்:**

பிரும்மாண்டத்திலே விளையாடுகிறான்! பகவான் பிரும்மாண்டத்திலே விளையாடுகிறான்!.

அந்த ஹம்ஸம் நான்! அந்த ஹம்ஸம் நான்! அந்த ஹம்ஸம் நான், அது நானே என்று விளையாடுகிறான். நான் பரமாத்மா! நான் முழுதும் நிரம்பியவன்! பிரம்மமே நான்! நான் பிரும்மம்! என்று விளையாடுகிறான். மெய்,கண்,செவி, நாக்கு, மூக்கு இவைகளாயும் ஐந்து வித பிராணன்களுக்கு இருப்பிடங்களாயுமுள்ள பிரம்மாண்டத்திலே விளையாடுகிறான். ஒலி, ஊறு, சுவை, முதலிய இந்திரிய அனுபவங்களை யுடையதும், ஸாத்விகம் ராஜஸம் தாமஸம் என்னும் முக்குணங்களோடும் தோழமை கொண்டதுமான பிரம்மாண்டத்திலே விளையாடுகிறான். புத்தி, மனம், சித்தம், அஹங்காரம் இவற்றின் மயமானதும், மண், நீர், தீ, வான், காற்று இவற்றின் மயமானதுமான பிரும்மாண்டத்திலே விளையாடுகிறான். பிரமன், விஷ்ணு, உருத்திரன் இவர்களுக்கு ஆதிகர்த்தா, பரமஹம்ஸ ரூபங்கொண்டு விளையாடுகிறான்.

## 14) தன்யாசி ராகம்; ஆதி தாளம்; ஸ்திரதா நஹி

பல்லவி

ஸ்திரதா நஹி நஹி ரே மானஸ (ஸ்திரதா)

சரணம்

தாபத்ரய ஸாகர மக்னானாம்
தர்பாஹங் கார விலக்னானாம் (ஸ்திரதா)

விஷய பாச வேஷ்டித சித்தானாம்
விபரீத ஞான விமத்தானாம் (ஸ்திரதா)

பரமஹம்ஸ யோக விருத்தானாம்
பஹுசஞ்சலதர ஸுக ஸித்தானாம் (ஸ்திரதா)

**விளக்கம்:**

நிலை பெற்றிருப்பது என்பது இல்லை. இல்லையென்றோ? ஏமனமே! நிலைபெற்றிருப்பது இல்லை. இல்லையன்றோ? மூவகைத் தாபங்களாகிய சமுத்திரங்களிலே மூழ்கியவர்களும், செருக்கு அஹம்பாவம் இவற்றிலே பற்றுடையவர்களுமானவர்களுக்கு நிலை பெற்று இருத்தல் என்பது இல்லை. இந்திரிய சுகங்களாகிய கயிறுகளால் கட்டுண்ட மனமுடைய வர்களும், தவறான ஞானத்தால் மதங்கொண்டவர்களுமானவர்களுக்கு நிலைபெற்று இருத்தல் என்பது இல்லை. பரமஹம்ஸர்களுக்குரிய யோக நிலையோடு மாறுபட்டவர்களும் மிகவும் நிலையற்றதுமான சுகங்களையே பெற்றவர்களுமானவர்களுக்கு நிலை பெற்றிருத்தல் என்பது இல்லை.

## 15) ஆனந்தபைரவி ராகம்; ஆதி தாளம்; நஹிரே சங்கா

பல்லவி

நஹிரே நஹி சங்கா காசின் (நஹிரே)

சரணம்

அஜமக்ஷரம் அத்வைதமனந்தம்
த்யாயந்தி ப்ருஹ்மபரம் சாந்தம் (நஹிரே)

யே த்ய ஜந்தி பஹுதர பரிதாபம்
யே பஜந்தி ஸத் சித் ஸுக ரூபம் (நஹிரே)

பரமஹம்ஸ குரு பணிதம் கீதம்
யே படந்தி நிகமார்த்த ஸமேதம் (நஹிரே)

**விளக்கம்:**

அடே! அச்சம் இல்லையே! இல்லை. அடே! யாதொரு அச்சமும் இல்லை.! இல்லை! பிறப்பில்லாததும், அழிவில்லாததும் தன்னிலும் வேறாக ஒன்று இல்லாததும் முடிவில்லாததும், அமைதி மயமுமான சிறந்த பிரும்மத்தை எவர்கள் தியானஞ்செய்கிறார்களோ அவர்களுக்கு அட

மனமே அச்சமில்லையே!. மிகப்பல துன்பங்களையும் எவர்கள் விட்டு விடுகிறார்களோ, எவர்கள் ஸத், சித், ஆனந்தம் என்னும் ரூபங்கொண்டதை (பிரும்மத்தை) பக்தியோடு நாடுகிறார்களோ அவர்களுக்கு அச்சமில்லையே!. வேதப்பொருளோடு கூடியதாயும் பரமஹம்ஸ குருவினாலே சொல்லப்பட்டதாயுமுள்ள பாடலை எவர்கள் வாசிக்கிறார்களோ அவர்களுக்கு அச்சமில்லையே !.

## 16) காம்போதி ராகம்; ஆதி தாளம்; சிந்தா நாஸ்திகில

பல்லவி

சிந்தா நாஸ்திகில தேஷாம் (சிந்தா)

சரணம்

ஸமதமகருணா சம்பூர்ணானாம்
ஸாது ஸமாகம ஸங்கீர்ணானாம் (சிந்தா)

காலத் ரய ஜித கந்தர்ப்பாணாம்
கண்டித ஸர்வேந் த்ரியதர்ப்பாணாம் (சிந்தா)

பரமஹம்ஸ குரு பதசித்தானாம்
ப்ரம்மானந்தா ம்ருதமத்தானாம் (சிந்தா)

**விளக்கம்:**

கவலை இல்லையன்றோ? அவர்களுக்கு கவலை இல்லையன்றோ? அடக்கம், ஒடுக்கம், கருணை இவற்றால் நிரம்பியவர்களுக்கு நல்லோர்களின் சகவாசத்தாலே மதம் பிடித்தவர் களுமானவர்களுக்கு கவலை இல்லையன்றோ!. முக்காலத்திலும் மன்மதனை வென்றவர்களும் எல்லா இந்திரியங்களின் கொழுப்பையும் அடக்கினவர்களுமானவர்களுக்கு கவலை இல்லையன்றோ!. பரமஹம்சர்களான குருவின் பாதங்களில் சிந்தனையுடைவர்களும், பிரம்மானந்தமாகிய அமிர்தத்தால் மதம் பிடித்தவர்களுமானவர்களுக்கு கவலை இல்லையன்றோ !.

## 17) நாத நாமக்ரியா ராகம்; ஆதி தாளம்; ப்ருஹ்மைவாஹம் கில

பல்லவி

ப்ருஹ்மை வாஹம் கில
ஸத்குருக் ருபயா (ப்ரு)

சரணம்

பருஹ்மை வாஹம் கில குருக்ருபயா
சின்மய போதானந்த கனம் தத் (ப்ரு)

ஸ்ருத்யந்தைக நிரூபித மதுலம்
ஸத்ய ஸுகாம்புதி ஸமரஸ மனகம் (ப்ரு)

கர்மா கர்ம விகர்ம விதூரம்

நிர்மல ஸம்வித கண்டமபாரம் (ப்ரு)

நிரவதி ஸத்தாஸ்பத பதமஜரம்
நிருபம மஹிமனி நிஹித மனீஹம் (ப்ரு)

ஆஸா பாஸ வினாஸன சதுரம்
கோசா பஞ்சகாதீத மனந்தம் (ப்ரு)

காரண காரண மேகமனேகம்
கால கால கலிதோஷ விஹீனம் (ப்ரு)

அப்ரமேய பத மகிலாதாரம்
நிஷ்ப்ரபஞ்ச நிஜநிஷ்க்ரிய ரூபம் (ப்ரு)

ஸ்வப்ரகாச சிவ மத்வய மபயம்
நிஷ்ப்ரதர்க்ய மனபாய மகாயம் (ப்ரு)

விளக்கம்:

நான் பிரும்மமே அன்றோ? நற்குருவின் கிருபையாலே பிரும்மமே யன்றோ? நான் குருவின் கிருபையாலே பிரும்மமேயன்றோ? சின்மயமும் அறிவு ஸ்வரூபமும் ஆனந்தக் கட்டியும் தத் என்று சுட்டிக் காட்டப்பெற்றதுமான பிரும்மமே யன்றோ!

வேதாந்தங்களாகிய உபநிஷத்துகளால் மட்டுமே ஒரே விதமான நிரூபணஞ்செய்ய பெற்றதும், ஈடு இல்லாததும் என்றும் உள்ளதும் ஒரே விதமான முழு அமிர்தமயமானதும், மாசில்லாததுமான பிரும்மமே யன்றோ? கர்மம், அகர்மம், விகர்மம் என்பவைகளுக்கு அப்பாற்பட்டதும் இவற்றால் அடைய முடியாததும், நிர்மலமான ஸம்வித்ஞானமானதும் எல்லையற்றுமான பிரும்மமேயன்றோ!

எல்லைகள் இல்லாமல் நிலைத்திருக்கும் பொருளுக்கு இருப்பிட மாயுள்ளதும், அழிவில்லாததும், ஒப்பற்ற பெருமையிலே நன்றாக அமைந்துள்ளதும், பற்றுதல் இல்லாததுமான பிரும்மமே யன்றோ!. ஆசைகள் என்னும் கட்டுக்களைக் தறித்தெறியும் திறமை வாய்ந்ததும், ஐந்து கோசங்களையும் கடந்ததும், முடிவில்லாததுமான பிரும்மமேயன்றோ! காரணங்களுக் கெல்லாம் ஆதி காரணமாயிருப்பதும், ஒன்றேயானதும், பலவாக தோற்றுவதும், காலத்தை கடந்ததும் மிக இருண்டதான கலியின் தோஷம் தன்னிடம் இல்லாததுமான பிரும்மமேயன்றோ!. அளவிட்டு அறிய இயலாததும், எல்லாவற்றிற்கும் ஆதாரமாயிருப்பதும், பிரபஞ்சப்படாததும், உண்மையான தன்மையுடையதும், ஒருசெயலாலும் மாறுபடாதுமான பிரும்மமே யன்றோ!. தன் இயற்கையொளியோடு மங்களப் பொருளாயிருப்பதும், இரண்டற்றதும், அச்சமற்றதும், ஊகித்து அறிய வொண்ணாததும், கேடில்லாததும், உடலில்லாததுமான பிரும்மமே யன்றோ!.

## 18) நவ்ரோஜ் ராகம்; ஆதி தாளம்; ஸர்வம் ப்ரஹ்மமயம்

பல்லவி

ஸர்வம் ப்ர ஹ்மமயம் ரே ரே (ஸர்வம்)

சரணம்

கிம் வச நீயம் கிம வச நீயம்
கிம் ரச நீயம் கிம ரச நீயம் (ஸர்வம்)

கிம் படனீயம் கிம படனீயம்
கிம் பஜனீயம் கிம பஜனீயம் (ஸர்வம்)

கிம் போத்தவ்யம் கிம போத்தவ்யம்
கிம் போக்தவ்யம் கிமபோக்தவ்யம் (ஸர்வம்)

ஸர்வத்ர ஸதா ஹம்ஸத்யானம்
கர்த்தவ்யம் போ முக்திநிதானம் (ஸர்வம்)

**விளக்கம்:**

எல்லாம் ஒரே பிரும்ம மயம்! அடே! அடே! எல்லாம் ஒரே பிரும்ம மயமானது. சொல்லத்தக்கது எது? சொல்லத்தகாதது எது? செய்யத்தக்கது எது? செய்யத்தகாதது எது? கற்கத்தக்கது எது? கற்கத் தகாதது எது? பக்தியோடு சேவை செய்யத்தக்கது எது? பக்தியோடு சேவை செய்யத்தகாதது எது? அறியத்தக்கது எது? அறியத்தகாதது எது? அனுபவிக்கத்தக்கது எது? அனுபவிக்கத்தகாதது எது? ஓய் எங்கும் எப்பொழுதும் முக்திக்கு காரணமான நானே அது என்னும் தியானமே செய்யத்தக்கது.

## 19) நவ்ரோஜ் ராகம்; ஆதி தாளம்; தத்வஜ் ஜீவத்வம்

பல்லவி

தத்வஜ் ஜீவத்வம் ப்ருஹ்மணி (தத்வஜ்)

சரணம்

யத்வத் தோயே சந்த்ர த்வித்வம்
யத்வன் முகுரே ப்ரதி பிம்பத்வம் (தத்வஜ்)

ஸ்தாணௌ யத்வன் நரரூபத்வம்
பானுகரே யத்வத் தோயத்வம் (தத்வஜ்)

ஸுக்தௌ யத்வத் ரஜதமயத்வம்
ரஜ்ஜௌ யத்வத் பணிதே ஹத்வம் (தத்வஜ்)

பரமஹம்ஸ குருணாத்வய வித்யா
பணிதா திக்ருத மாயா வித்யா (தத்வஜ்)

**விளக்கம்:**

அதுபோல ஜீவனுடைய தன்மை, பிரும்மத்திலே அதுபோல

ஜீவனுடைய தன்மை! நீரிலே சந்திரன் இரண்டாகும் தன்மை எப்படியோ கண்ணாடியிலே பிரதி பிம்பத்தின் தன்மை எப்படியோ அப்படி!. மரத்தூணிலே மானுட வடிவின் தன்மை எப்படியோ? சூரிய கிரணத்திலே கானல் நீரின் தன்மை எப்படியோ அப்படி!. சிப்பியிலே வெள்ளிமய மாயிருத்தல் எப்படியோ, பழுதையிலே பாம்பின் உடலின் தன்மை எப்படியோ அப்படி!. (இவ்வாறு) பரமஹம்சரான குருவாலே மாயை என்னும் அவித்தையை விரட்டிய அத்வைத வித்யையானது சொல்லப்பெற்றது.

## *20) கல்யாணி ராகம்; ஆதி தாளம்; பூர்ணபோ தோஹம்*

பல்லவி

பூர்ணபோ தோஹம் ஸதாநந்த (பூர்ண)

சரணம்

வர்ணாச்ரமாசார கர்மாதி தூரோ ஹம்
ஸ்வர்ணவத் அகில விகார கதோஹம் (பூர்ண)

ப்ரத்ய காத்மாஹம் ப்ரவித்தத் ஸத்ய கநோஹம்
ச்ருத்யந்த ஸதகோடி ப்ரகடித ப்ருஹ்மாஹம்
நித்யோஹம் அபயோஹம் அத்விதீ யோஹம் (பூர்ண)

ஸா க்ஷீ மாத்ரோஹம் ப்ரகலித பக்ஷபாதோஹம்
மோக்ஷ ஸ்வரூபோஹம் ஓம்கார கம்யோஹம்
ஸுக்ஷ்மோஹம் அனகோஹம் அத்புதாத்மாஹம் (பூர்ண)

ஸ்வப்ராகாஸோஹம் விபுரஹம் நிஷ்ப்ரப்ஞ்சோஹம்
அப்ரமேயோஹம் அசலோஹம் அகலோஹம்
நிஷ்ப்ரதர்க்யா கண்டைகரஸோஹம் (பூர்ண)

அஜநிர்மமோஹம் புதஜன பஜநீயோஹம்
அஜரோஹ மமரோஹம் அம்ருத ஸ்வரூபோஹம்
நிஜபூர்ண மஹிமனி நிஹித மஹி தோஹம் (பூர்ண)

நிரவயவோஹம் நிருபம நிஷ்களங்கோஹம்
பரமஸிவேந்த்ர ஸ்ரீகுரு ஸோம ஸமுதித
நிரவதி நிர்வாண ஸுகஸாக ரோஹம் (பூர்ண)

**<u>விளக்கம்:</u>**

நான் பரிபூர்ண ஞானமயன்!. நான் எப்பொழுதும் ஆனந்தமயமான பரிபூர்ண ஞானஸ்வரூபி. நான் வர்ணாசிரம ஆசாரங்களுக்கும், கிரியைகளுக்கும் அப்பாலுள்ளவன். நான் பொன்னைப்போல எல்லா உருவ மாறுபாடுகளையும் அடைந்தும் அம்மாறுபாடுகளினின்றும் விலகியவன். நான் உள்ளுறையும் ஆத்மா! நான் எங்கும் பரந்துள்ளதான ஒரே ஸத்மயமானவன். நான் உப நிஷத்துக்களிலே பல கோடி முறை வெளியிடப்பெற்ற பிரும்மம். என்றும் இருப்பவன் நான். அச்சமில்லாதவன் நான். இரண்டற்ற தனிப்பொருள் நான். ஸாக்ஷியாக இருப்பவன் நான். பக்ஷபாத மற்றவன் நான்.

மோக்ஷத்தையே ஸ்வரூபமாகக் கொண்டவன் நான். ஓங்காரமாகிய பிரணவத்தை அறிவதற்குரியவன் நான். யாராலும் காண முடியாத பரமாத்மா நான். களங்கமற்றவன் நான். வியக்கத்தக்க ஆத்மா! நான். தன்னொளியுடையவன் நான். எங்கும் வியாபித்து எல்லாவற்றிலும் நிரம்பியிருப்பவன் நான். பிரபஞ்சப்படாதவன் நான். பிரமாணங்களாலும் அளவிட்டறிய வொண்ணாதவன் நான். மலைபோல நிலைத்திருப்பவன் நான். பாகுபாடுகள் இல்லாத தன்மையுடையவன் நான். ஊகித்து அறியவொண்ணாததாய் பூர்ணமாய் முழுதும் ஒரே விதமான ஆனந்தமானவன் நான்.

நான் பிறப்பும் எனது என்னும் உணர்ச்சியுமில்லாதவன், நான் அறிவாளிகளால் வழிபடத்தக்கவன். நான் மூப்பில்லாதவன். நான் மரணமில்லாதவன். நான் அமிர்தமயமானவன். நான் நிரம்பிய என் பெருமை பற்றி நிலை நின்று புகழ் பெற்றவன். பாகுபடுத்த இயலாதவாறு ஒரே தன்மையான முழு பொருள். நான் ஒப்பற்று களங்கமற்றவன். நான் பரம சிவேந்திரர்கள் என்னும் ஸ்ரீ குருவாகிய சந்திரனைக் கண்டு கிளர்ந்தெழும் எல்லையற்ற நிர்வாண ஸுகமாகிய ஸாகரம்.

## 21) மத்திய மாவதி ராகம்; ஜம்ப தாளம்; ஆனந்த பூர்ண போதோஹம் 1

பல்லவி

ஆனந்த பூர்ண போதோ ஹம் ஸததம் (ஆனந்த)

சரணம்

ப்ரத்யகத் வைத ஸாரோஹம்
ஸகலச்ருத் யந்த தந்த்ர
விதி தோஹம் அம்ருதோஹ மத்யனந்தர
பாவிதோஹம் (ஆனந்த)

விதித நித்ய நிஷ்களரூப
நிர்குண பதோஹம்

ஸாக்ஷி சின் மாத்ர காத் ரோஹம் பரம
மோக்ஷ ஸாம் ராஜ்யா

திபோகம் அம்ரு தோஹம் பக்ஷ பாதாதி
தூரோ ஹம்
அதிகஸுக்ஷ் மோஹம் அனவதிக
ஸுகஸாக ரோஹம் (ஆனந்த)
ஸ்வப்ர காசைகஸா ரோஹம் ஸதஹம் ப்ர பஞ்சாத்ம
பாவோ ஹம் அப யோஹம் நிஷ்ப்ரதர்க் யோஹம்
ஸமரோஹம் சித ஹமப்ரமே யாக்யமூர்த்தி
ரேவாஹம் (ஆனந்த)

**விளக்கம்:**

நான் ஆனந்தம் நிரம்பிய ஞானவடிவன். எப்பொழுதும் நான் ஆனந்தன் நிரம்பிய ஞானவடிவன். நான் உள்ளுக்குள்ளே இரண்டற்றதான உட்பொருள். எல்லா உப நிஷத்துக்களிலும் சொல்லப் பட்ட உபாஸனை விதிகளாலே அறியப்படும் பொருள். நான் மரணமில்லாதவன். நான் கருத்தாலே இடைவிடாது கருதப்பெற்றவன். நான் எப்பொழுதும் உள்ளதாகி பாகுபாடொன்று மில்லாத தன்மையுடையதான நிர்க்குணப் பொருளாக அறியப்பெற்றவன். நான் ஸாக்ஷியாகி சின்மயம் மட்டுமே வடிவானவன். நான் மிகச்சிறந்த மோக்ஷம் என்னும் ஸாம்ராஜ்யத்திற்கு அதிபதி. நான் மரணமில்லாதவன். பக்ஷ பாதத்தினின்று மிகவும் விலகியிருப்பவன். நான் மிகவும் நுண்மையான பொருள். நான் எல்லையற்ற ஆனந்தஸாகரமானவன். நான் கலப்பற்ற ஒரே விதமான அமிர்தமாயிருப்பவன். நான் உண்மைப் பொருள். நான் பிரபஞ்சிக்கப்படாத ஆத்மாவின் தன்மையையுடையவன். நான் அச்சமில்லாதவன். நான் அறிவால் அறியவொண்ணாதவன். நான் மரணமில்லாதவன். நான் சித்து. நான் அளவிட வொண்ணாதது என்று சொல்லபடும் வடிவமானவனே!

## 22) சங்கரா பரணம் ராகம்; மிச்ர தாளம்; ஆனந்த பூர்ண போதோஹம் (2)

பல்லவி

ஆனந்த பூர்ண போதோ ஹம் ஸச்சி
தானந்த பூர்ணபோதோஹம் ஸிவோ ஹம் (ஆனந்த)

சரணம்

ஸர்வாத்ம சரோஹம்
மரி நிர்வாண நிர்குண நிகிலாத்ம கோஹம்
கீர்வாண வர்பான தோஹம்
காம கர்வ நிர்வாபண தீரத ரோஹம் (ஆனந்த)
ஸத்ய ஸ்வரூப பரோஹம்
வரச்ருத் யந்த போதித ஸுகஸாகரோஹம்
ப்ரத்யகபின்னப ரோஹம்
சுத்த மந்துர ஹித மாயா தீ தோஹம் (ஆனந்த)
அவபோத ரஸஸாக ரோஹம்
வ்யோமபவனுதிபஞ்ச பூதாதி தூரோஹம்
கவிவர ஸம்ஸேவ் யோஹம்
கோர பவ சிந்து தாரக பரம ஸுக்ஷ் மோஹம் (ஆனந்த)
பாதிதகுண கலனோஹம்
புத்த சோபித ஸமரஸ பரமாத்மாஹம்
ஸாதன ஜாதா தீ தோ ஹம்
நிருபாதிக நிஸ் ஸீமபூமா நந்தோஹம் (ஆனந்த)

நிரவய வோஹம் அஜோ ஹம்
நிருபம மஹிமனி நிஹிதமஹி தோஹம்
நிரவதி ஸத்வ கனோஹம்
தீர பரம சிவேந்த்ர ஶ்ரீ குரு போதி தோஹம் (ஆனந்த)

**விளக்கம்:**

நான் ஆனந்தமயமான பரிபூர்ண ஞானமயமானவன். நான் ஸத், சித், ஆனந்தம் இவையான பரிபூர்ண ஞானமயமானவன். நான் மங்கள ஸ்வரூபி. நான் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக சஞ்சரிப்பவன். நான் தான் என்ற உணர்ச்சி அறவே ஒழிந்து நிர்க்குணப்பொருளாய் எல்லா வற்றிற்கும் ஆத்மாவானவன். நான் தேவர்களிற் சிறந்தவர்களாலும் வணங்கப்பெற்றவன். நான் காமதேவனுடைய கர்வத்தை அறவே அழிப்பதில் அதிதீரன். நான் ஸத்திய ஸ்வரூபத்தினின்றி வேறுபடாதவன். நான் சிறந்த உபநிஷத்துக்களாலே அறிவிக்கப்பெற்ற ஆனந்த ஸாகரமயமானவன். நான் உள்ளுக்குள் வெவ்வேறாக வகுக்கப் பெறாத சிறந்த பொருள். நான் பரிசுத்தனும், குற்றமற்றவனும், மாயையை விட்டு விலகியவனுமானவன். நான் விழிப்புள்ள ஞானமாகிய ஆனந்த ஸாகர மயமானவன். நான் ஆகாசம், வாயு முதலிய பஞ்ச பூதங்களுக்கு அப்பாலுள்ளுவன். நான் சிறந்த ஞானிகளால் நன்றாகப் புகழத் தக்கவன். நான் பயங்கரமான ஸம்ஸார ஸாகரத்தைக் கடத்தி கரையேற்றுவதற்கான மிகுந்த திறமை வாய்ந்தவன்.

நான் குண தோஷங்களினின்றி நீங்கியவன். நான் அறிவுடையதும், குற்றமொன்றுமில்லாமல் சுத்தமானதும் எல்லாவற்றிலும் ஒரே தன்மையுடையதுமான பரமாத்மா. நான் பொருள்களாகிய தொகுதிக்கு அப்பாற்பட்டவன். நான் மாறுபடுத்தும் உபாதிகளின்றி உண்மையானதும், போலியாகத் தோற்றாததும் எல்லையற்றதும் பெருக்கமுடையதுமான ஆனந்தமானவன்.

நான் அங்கங்கள் என்று பாகுபாடுபடுத்த இயலாதவாறு ஒரே தன்மையையான முழுப்பொருள். நான் பிறப்பில்லாதவன். நான் ஒப்பற்ற பெருமை பற்றி நிலைநின்றுப் புகழப் பெற்றவன். நான் எல்லையற்றதான ஸத் மயமே ஆனவன். நான் தீரர்களான பரம சிவேந்திரர்கள் என்னும் ஶ்ரீகுரு மூர்த்திகளாலே அறிவுறுத்தப்பெற்றவன்.

## 23) ஸ்ருடி ராகம்; ஆதி தாளம்; ஜய துங்க தரங்கே

பல்லவி

ஜய துங்க தரங்கே கங்கே (ஜய)

சரணம்

கமல பவாண்ட கரண்ட பவித்ரே
பகுவித பந்த சேதல வித்ரே (ஜய)

தூரி க்ருத ஜன பாப ஸமூஹே
பூரித கச்சப குச்ச க்ராஹே (ஜய)
பரம ஹம்ஸ குரு பணித சரித்ரே
ப்ருஹ்ம விஷ்ணு ஸங்கர நுதிபாத்ரே (ஜய)

**விளக்கம்:**

உயர்ந்த அலைகளையுடைவளே போற்றி! கங்கையே! உயர்ந்த அலைகளையுடையவளே போற்றி ! பிரும்மாண்டங்களாகிய பேழைகளைப் பரிசுத்தஞ் செய்பவளே! பலவிதமான கட்டுகளையும் அறுத்தெரியும் அரிவாளாக இருப்பவளே போற்றி!. ஜனங்களின் பாவக்குவியல்களை பறக்கச் செய்பவளே! ஆமைத் தொகுதிகளாலும், முதலைகளாலும் நிரம்பியவளே! போற்றி!

ப்ரம்மன், விஷ்ணு, சங்கரன் இவர்களுடைய ஸ்துதிக்குப் பாத்திரமானவளே! பரமஹம்சர்களான குருவாலே புகழ்ப்பெற்ற நடத்தையையுடையவளே! போற்றி!

---

# அவதூதர் பிறப்பு

உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவனாகிய சோமசுந்தரக் கடவுள் மீனாட்சி அம்மையுடன் அருள்புரியும் மதுரை மாநகரில் சுமார் கி.பி. 1600-ம் ஆண்டு ஆந்திர பிராமண வகுப்பைச் சேர்ந்த சோமநாத யோகி இளமைப் பருவத்திலே யோகமகிமையால் பிரம்மச்சரிய விரதம் மேற்கொண்டு குண்டலினி யோகத்தை பயின்றார். திருமண ஆசை இல்லாத தன் மகனை தாய் தந்தையர் நம் குலம் தழைக்க ஒரு மகன் வேண்டும் என்று வற்புறுத்தி சோமநாத யோகிக்கு பார்வதி அம்மையை திருமணம் செய்து விட்டு சந்நியாசம் சென்று விட்டார்கள். சோமநாத யோகி பல ஆண்டு காலமாக திருமண வாழ்க்கையை நடத்தினாலும் இல்லற வாழ்வில் ஈடுபடவில்லை. ஆகவே பார்வதி அம்மையார் தன் கணவனிடம் உங்கள் பெற்றோர்கள் குலம் தழைக்க வேண்டும் என்பதற்காகத்தானே நமக்கு திருமணம் முடித்தார்கள். அவர்கள் ஆசை நிறைவேற வேண்டாமா என வினவினார். அதற்கு அவர் நமக்கு நல்ல சத்புத்ரன் பிறக்க வேண்டுமானால் நீ கோடான கோடி இராமநாமத்தை ஜெபிக்க வேண்டும் என கூறி ராமநாமத்தை கற்றுக்கொடுத்தார். அம்மையாரும் இடைவிடாது இராம நாமத்தை கூறி வந்தார். சில காலம் கழித்து தீர்த்த யாத்திரை மேற்கொண்டு ராமேஸ்வரம் சென்று தங்கினர். அன்று இரவு இருவர் கனவிலும் சிவபெருமான் தோன்றி உங்களுக்கு ஆண் மகவு பிறக்கும் என கூறி மறைந்தார்.

இதன் பின் அவர்கள் இல்லற வாழ்வை தொடங்கி ஆண் குழந்தை பெற்று சிவராமகிருஷ்ணன் என பெயரிட்டு வளர்த்தார்கள். சிவராமகிருஷ்ணன் இள வயதிலேயே வேதங்கள் கற்று வித்வானாக வேலைபார்த்து தன் குருவின் ஆசியால் மவுன விரதம் அனுஷ்டித்து அஷ்டமாசித்திபெற்று சற்குரு சதாசிவ ப்ரம்மேந்திரராக வாழ்ந்தவர்.

உ

ஓம் ஶ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மணேநம:

## ஶ்ரீசதா சிவ பரஹ்மேந்திரர் அருளிய

# மநோ நியமனம்

1) ஆஸி விஷ விஷ விஷமைர் நிமிஷோன் மேஷைர்
நிஷே விதைர் விஷ யை:!
அல மதுனா கலயேதா : மானஸ
மிஹி காம யூக கூடாலம்!!

**பொழிப்புரை:**

ஓ மனமே! எந்நேரமும் பேரழிவைக் கொடுக்கக் கூடிய இந்திரிய சுகங்களிலேயே திளைத்து விட்டாய். அவைகள் அனைத்தும் கொடிய விஷமுள்ள பாம்புகளின் விஷத்தைவிட பாதிக்க கூடிய எதிர் மறை விளைவுகளைத் தரக்கூடியவை.

இப்போதேனும் ஓ மனமே! இந்த மயக்கத்திலிருந்து விழித்து மூன்றாம் பிறை சந்திரனை தன்னுடைய தலையில் சூடியுள்ள கடவுள் சிவபிரானை நினை!

2) அஹமிதி மதி மதிஹேயே வாரயகாயே நிரந்தரா பாயே!
பரசிவ தாமிதேயே ப்ரஹ்ம மணி ஸதயே நிதேஹி தாம் ஹ்ருதயே!!

**பொழிப்புரை:**

ஓ மனமே! இந்த அழியக்கூடிய வெறுக்கத்தக்க உடலோடு ஒன்றிய "நான்" "எனது" என்ற அஹங்கார எண்ணத்திலிருந்து விடுபட்டு வெளியே வா!

இறைவனாகிய பரமசிவன் மேல் உன் கவனத்தையும், எண்ணங்களையும் செலுத்து மனமே! கருணை பொருந்திய பரமசிவன் பாதம் பணிந்து உயர்ந்த நிலையினை ப்ரம்ம நிலையை அடைய முயற்சி செய்!

3) சல தல தல சஞ்சலமிமம் அசலவதசலம்
ப்ரதீத்ய கில காயம் !
முஹ்யஸி சிவபத விமுகம் சிவசிவ சும சாப
சாப லைஷ்சேத: !!

**பொழிப்புரை:**

ஓ மனமே! மலை எப்படி அழிவற்றதோ அவ்வாறு இந்த பூத உடலும் அழிவற்றது என உறுதியாக நம்பிக்கை கொண்டிருக்கிறாய். உண்மை என்னவென்றால், இவ்வுடலானது காற்றினாலும், வெயிலிலும்,

மழையிலும் அலைக்கப்பட்டு காய்ந்து உதிரக்கூடிய மெல்லிய அரச மர இலை போன்றது. அதாவது வலி, சந்தோஷம், உஷ்ணம், குளிர்ச்சி, மகிழ்ச்சி, வருத்தம், மழை, மின்னல் போன்றவற்றால் அலைக்கப்பட்டு நோய்வாய் பட்டு இறக்கக்கூடிய பூத உடலாகும்.

ஓ மனமே! பவித்ரமானதும் கருணையுடன் கூடிய சிவனின் பாதத்தை நினைப்பதை விட்டு மன்மத அம்பு பாய்ந்து சிற்றின்பங்களில் ஈடுபட்டு உன்னையே அழித்துக்கொள்கிறாய்.

அய்யகோ! இந்த முட்டாள் தனத்தை என்ன வென்று சொல்வது? சிவ சிவ ஓ பரம சிவனே இவற்றை மன்னித்து ஏற்றுக்கொள். மன்னிக்கப் பட்டால் ஏ மனமே நன்மார்க்கத்தை தேர்ந்தெடுத்து அதன்படி நட.

**4) யாதம் தின மித மேவம் ஸ்வ: கில பவிதா**
**சுமேரு ரபி ஹஸ்தே!**
**இதி நித்யம் பாவயதா பவதா கதி**
**சித்த மேர வோ லப்தா:!!**

**பொழிப்புரை:**

ஓ மனமே! எந்த ஒரு சாதனையும் இல்லாமல் இந்த நாள் கடந்து விட்டது என எண்ணுகிறாய். ஆனால் நாளைய தினம் நிச்சயமாக தங்கச் சுரங்கத்தை போன்ற மேருமலை என் கையில் கிடைக்கும் என எண்ணுகிறாய். இப்படியே எத்தனை நாள் கடந்து விட்டது. சொல் எனக்கு. ஓ மனமே! எத்தனை தங்க சுரங்கம் போன்ற மேருமலைகளை இதுவரை நீ பெற்று உள்ளாய்! ஏன் உன்னுடைய நேரத்தையும், பலத்தையும் வீணடிக்கிறாய்? ஓ மனமே! இப்போதாவது சிவபெருமானை அடைக்கலம் அடைவாய்.

**5) கதிதா ஹ்ருதனுப பூவித தருத்ருணக்ருமி**
**யோனி சக்ர சங்க்ரமணம்!**
**திஷ்ட்யா மானுஷ பாவாத் பாரஸ் ப்ருகிவாஸி**
**மாத் வீஹ ப்ரமத:!!**

**பொழிப்புரை:**

ஓ மனமே! நீ எத்தனை பிறவிகளை மரம், செடி, கொடி, புல், புழு, பறவை, மிருகம் போன்ற பற்பல உடல்களில் மீண்டும் மீண்டும் பிறந்து துன்புற்றுய். போதும் இந்த பிறப்பு, மறு பிறப்பு என்று பல உடல்களில் பிறப்பெடுப்பது. அதிர்ஷ்டவசமாக கிடைத்ததற்கு அரிய மனித பிறவி எடுத்துள்ளாய்.மனித பிறவியை கொண்டு சம்சாரமெனும் பெருங்கடலை தாண்ட முயற்சி செய். ஆகவே மனித பிறவியை நன்கு பயன்படுத்தி எதிலும் சரிந்து விழாமல் முயற்சி எடுத்து மீண்டும் பிறவா நிலையை அடைவாய்.

6) ப்ராக்க்ருத் போகாவஸரே தாம்யஸி சேதோ
முதா குதோ ஹேதோ:!
ந்யக்ரோத பீஜ முப்த்வா ஷோசன்னிவ நாம்ர
மஸ்யேதி!!

**பொழிப்புரை:**

நீ செய்த தீய செயல்களின் பயனால், துன்பத்தையும், துயரத்தையும் அனுபவிக்கும் போது, ஓ மனமே, நீ கவலைபட்டு அல்லல்படுகிறாய். அரச மர விதைகளை நட்டு விட்டு அம்மரத்திலிருந்து மாம்பழம் கிடைக்கும் என்று எண்ணுகிறாய். ஏன் இந்த வீணான எண்ணம் ? அரசமர விதைகளை நட்டு விட்டு அம்மரத்திலிருந்து மாம்பழத்தையா அறுவடை செய்ய இயலும்? தயவு செய்து உன் எண்ணங்களும் செயல்களும் தூய்மையாகவும், நல்லதாகவும் இருக்குமாறு பார்த்துக்கொள்.

7) இஜ்யா தீர்த்த வ்ரஜ்யா ப்ரவர்ஜ்யா வா ஸதாம்
ஸமஜ் யா வா!
ஆஸ்தாமயி பவதரணம் லகுதவ கரணம் மன:
ஷிவஸ்மரணம்!!

**பொழிப்புரை:**

சம்சார சாகரம் என்ற பெருங்கடலை கடப்பதற்காக ஓ மனமே! நீ யாகம், யஜ்ஞங்கள் செய்வது, புனித தலங்களுக்கு யாத்திரை செல்வது, சந்நியாசம் பெற்றுக் கொள்வது, நல்லோர்களுடைய சத்சங்கம் போன்ற பல வித முறைகளை கையாளலாம். ஆனால் மிக மிக எளிதான உய்யும் வழியான சிவநாமத்தை நினைப்பது ஸ்மரிப்பது, ஜெபிப்பது, துதிப்பது அவன் புகழைப் பாடுவதுதான். இதற்கு எந்த வித கஷ்டமோ, நஷ்டமோ இல்லை. தயவு செய்து இதை நீ செய்வாய்.

8) பரயுவதி தீபிகாயாம் அர்ரதி ரூபம்நீரிக்ஷ்ய வதரூபம்!
மோஹான்னி பத்ய சேத: பதங்கமா த்வம் க்ஷயம் யாஹி!!

**பொழிப்புரை:**

மிக அழகிய கவர்ச்சியான ஒரு பெண்ணைப் பார்த்தால் ஓ மனமே! அவளது அழகிலும், கவர்ச்சியிலும் மயங்கி, விளக்கின் ஒளியால் கவரப்பட்டு அழியும் விட்டில் பூச்சியைப் போல் அழிந்து விடாதே!. நீ காணக்கூடிய அப்பெண் மனித உருவில் இருந்து உன்னை விழுங்கி, எரித்து, சாம்பலாக்கக் கூடிய கொடிய காமத்தீ என்பதை நீ நினைவில் கொள்!

9) பவமிஷ ப்ரது விஷ ஸமனோ மானஸ பிஷகேஷ
ஷங்கர: ஸேவ்ய:!
ப்ரதமோ தைவ் யோ பிஷகிதி யம் கில ஜனனி
ஷ்ருதி: ஸ்வயம் ப்ராஹ!!

**பொழிப்புரை:**

நாம் மிகவும் எளிதில் நெருங்கக்கூடிய சிவபெருமானுக்கு சங்கரா என்ற பெயரும் உண்டு. அவர் இறை வைத்தியர் ஆவார். அவர் ஸம்சாரம் என்னும் கொடிய விஷத்தின் தன்மையை நீக்கி அருளக்கூடியவர். ஆகவே ஓ மனமே! நீ அவரை வணங்கி துதி! இந்த உண்மை நமது வேதங்களில் உறுதியாகக் கூறப்பட்டுள்ளது. சிவபெருமான் தான் முதலும் முழுமையுமான இறை வைத்தியர் என்று புகழ்கிறார்கள். இப்படியாக வேதத்தில் கூறியிருப்பதால் நீ சிவபிரானின் பாதங்களை கெட்டியாக பற்றிக்கொள்.

10) அதிரஸை: அன்னரஸை: மானஸ நபஸங்க மாக்னி
பஷ காணாம் !
புஜிகர்மீ பூதஸ்ய ப்ராயோ வபுஷ: கிமித்யுபஸ் குருஷே!!

**பொழிப்புரை:**

ஓ மனமே! என்ன எண்ணத்தினால் வித விதமான சுவையான உணவுகளாலும், திரவங்களாலும் மற்றும் பல சாதனங்களாலும் உன் உடலைப் போஷித்து வளர்க்கிறாய். இறுதியில் உன் உடலானது தீக்கு இரையாகவோ அல்லது நாய்கள் மற்றும் கழுகுகளுக்கு உணவாகவோதான் போகப்போகிறது. எனவே உன் உடலையும், மனத்தையும் சிவபெருமானிடம் செலுத்தி வணங்கி சம்சாரம் என்னும் பெருங்கடலை கடக்க முயற்சி செய்.

11) பத்ர பல மாத்ர சுலபே காமித பலதே ஸ்திதே ஸாம்பே!
பஜஸே க்ருபணம் ந்ரு பஸூம்து: சேவ்யம்ஹா கதம்சேத:!!

**பொழிப்புரை:**

அய்யகோ! நான் என்னவென்று சொல்வேன்? ஓ மனமே! கருணைக் கடலாகிய சிவபெருமானுக்கு நீ அளிக்கும் வில்வ இலையோ அல்லது ஏதேனும் ஒரு பழமோ அல்லது வேறு ஏதேனும் சாதாரண பொருளையோ ஏற்றுக்கொண்டு நீ வேண்டிய/கோரிய எல்லா வரங்களையும் அள்ளித் தர காத்திருக்கும்போது கஞ்சத்தனமும் குரூர குணங்களும், திருப்தி அடையாத வணங்குவதற்கு அருகதையற்ற ஒரு அற்ப பிறவியான சாதாரண மனிதனை துதிக்கிறாயே இது எங்ஙனம்?

12) ஆப்ரா தராதினாந்தாத் ஆச தினாந்தாத் புனஸ் சிதாப் ராத:!
வ்யாபாராந்தர ஹாயம் வ்யாப்ரிய தாமிந்து சூட சரணாப்ஜே!!

**பொழிப்புரை:**

சூரிய உதயம் முதல் அஸ்தமனம் வரை மீண்டும் அஸ்தமனம் முதல் சூரிய உதயம் வரை சிவ பெருமானின் தாமரைப் பாதங்களை பக்தியுடன் பற்றிக்கொண்டு அவனது சேவையில் இடையூறு எதுவும் இல்லாமல் ஒவ்வொரு நாளும் தடையற்ற சேவை செய். மூன்றாம் பிறை சந்திரனை தன்னுடைய தலையில் சூடிய சிவபெருமானை துதித்து வணங்கி அவனது, அருளையும், ஆசியையும் பெறுவாயாக. தயவு செய்து தாமரையை ஒத்த அவனது பாதங்களை சிக்கெனப்பிடித்து வணங்குவாயாக!

13) துஷ்பூரகுக்ஷி பரிபூரண பாரவஸ்யாத்
கர்ப்பூர கௌரவபுஷம் புருஷம் விஹாய!
அன்யம் கிமாஸ்ரயஸி ஹந்த ஸகே மனஸ்த்வம்
தன்யம் பஜஸ்வ ஸததம் தருணேந்து சூடம்!!

**பொழிப்புரை:**

என்னுடைய நண்பனான ஓ மனமே!, உன் உடல் கட்டாயத்திற்காகவும் தேவைக்காகவும், உணவினால் வயிற்றையும், ஆசைகளால் உன் மனத்தையும், நிரப்பிக் கொள்கிறாய். தூய்மையும், வெண்மையும் நிரம்பிய கர்ப்பூரத்தை ஒத்த கருணையும் அருளும் உடைய சிவபிரானை நீ மறந்து விட்டாயே!

உன்னுடைய ஆசைகளையும், தேவைகளையும் பூர்த்தி செய்ய முடியாத வக்கற்ற ஒரு சாதாரண மனிதனைக் கெஞ்சுகிறாய். ஓ என் நண்பா! இப்போதாவது தெரிந்து கொள். உன்னுடைய தேர்வு சரியல்ல என்று.

சந்திரனுக்கு ஏற்பட்ட களங்கத்தை போக்க மூன்றாம் பிறைச் சந்திரனை தன் தலையில் சூடிய சிவபிரானை வணங்கி அவனை சரண் அடைந்தால் உன் வாழ்வு முழுமையும் அவன் அருளால் நிறைவு பெறும்.

ஓ மனமே! ஆகையால் எப்போதும் கடவுள் சிவனை துதித்து, உன்னுடைய வாழ்வை கடவுளின் கருணையால் பயனுள்ளதாக ஆக்கிக் கொள். இதுபோல் வாழ்வின் முழுமையையும் அடைவாய்.

ஓம் நம: சிவாய !!

உ

ஓம் ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மணேநம :

## ஸ்ரீசதா சிவ ப்ரஹ்மேந்திரர் அருளிய நவ வர்ண ரத்ன மாலா

1) ஓம் காரைக்க நிரூப்யம் பங்கஜ பவனாதி பாவித பதார்ஜம்!
சிங்கர கைரவ ஷஷினம் சங்கர மேகம் சிவம் கலயே!!

**பொழிப்புரை:**

ஓம் என்னும் ப்ரணவப் பொருளாக உணரப்படுபவனாகிய சிவபெருமானை நான் துதிக்கிறேன். அவனது தாமரை போன்ற திருப்பாதங்களை இந்திரன், வாயு, வருணன், அக்னி மற்றும் பிரம்மா போன்ற அனைவரும் துதிக்கின்றனர். பூரண சந்திரனைக் கண்டால் அல்லிமலர்வதைப் போல், சிவபெருமானை கண்ட நாம் இதயம் முழுவதும் மலர்ந்து தெளிவு பெறுகின்றோம். சிவன் நாமமாகிய 'சங்கரன்' என்ற நாமம் நமக்கு உயர்ந்த அமைதியை அளிக்க வல்லது.

2) ஐந்த்ரம் பதமபி மனுதே நைவ வரம் யஸ்ய பதரஜ:
ஸ்பர்ஸாத்!
ஸாந்த்ர ஸுகோத் அதிமேகம் சந்த்ரகலோத்தம்
சமீஸம் ஆஸேவே!!

**பொழிப்புரை:**

பிறை சந்திரனை தலையில் சூடிய அந்த மஹா பிரபு அளவற்ற புகழும், மகிழ்ச்சிக் கடலும் ஒருங்கிணைந்த உருவம் பெற்ற சிவபெருமான். அவனது பாத தூளிகள் பக்தர்களுக்கு அளவற்ற மகிழ்ச்சியை அளிக்கக் கூடியது. அதற்கு முன்னால் இந்திர பதவியும், ஸ்வர்க்கலோகமும் தூசி போல் தோன்றும். ஆகவே நான் சிவனையே வழிபட்டு அவனுக்கு எல்லாவிதமான சேவைகளையும் செய்ய விரும்புகிறேன்.

3) நாகேஸக்ருத்தி வசனம் வாகிஸாத்யைக வந்திதா அங்கிரியுகம்!
போகீஸ பூஷிதாங்கம் பாகீக்ருத சர்வ மங்களம் நௌமி!!

**பொழிப்புரை:**

தர்மத்தை நிலை நாட்டுவதற்காக கஜாசூரனை வெற்றி கொண்டு, அவனின் யானைத் தோலை போர்த்திக் கொண்ட சிவபெருமானை நான் சிரம்தாழ்த்தி வணங்குகிறேன். பிரம்மா முதலிய தேவர்களால் வணங்கப் படுபவரும், நாகங்களின் தலைவனாகிய வாசுகியை ஆபரணமாக அணிந்தவரும், தன் உடம்பில் ஒரு பகுதியை பார்வதிக்கு கொடுத்து அவளுக்கு ஸர்வமங்களா என்ற பெயர் வரக்காரணம் ஆனவருமான பரமசிவனை சிரம் தாழ்த்தி வணங்குகிறேன்.

4) நகராஜ ஷிகர வாஸினம் அகஜாமுக குமுத கௌமுதி
நிகரம்!
ககன ஸிரோருஹம் ஏகம் நிகம சிரஸ்தந் த்ரவிதிதம்
அவலம்பே!!

**பொழிப்புரை:**

மலைகளின் அரசனான இமய மலையின் சிகரமாக விளங்கும் திருக்கயிலாயத்தில் வாசம் செய்யும் பரமசிவனிடம் நான் அடைக்கலம் பெற விரும்புகிறேன். சிவபெருமானின் துணைவியான பார்வதித்தாயின் முகம் முழுமதியின் ஒளியால் மலர்ந்த அல்லி மலரைப் போல் மகிழ்வுடன் மலர்ந்துள்ளது. சிவபெருமான்தான் வேத வேதாந்தங்களில் உட்பொருளான ப்ரம்மன். சிவன் தான் ககன சிரோருஹன் என்று அழைக்கப்படுபவர். ஆகாயத்திலுள்ள சூர்ய, சந்திர, நட்சத்திரங்கள் மற்றும் கிரஹங்களை தன் முடிக்கற்றைகளாகப் பெற்ற, சிறந்த பெருமை வாய்ந்த சிவ பெருமானை உறுதியாக பற்றிக் கொள்ள விரும்புகிறேன்.

5) மந்தஸ்மிதலஸ தானனம் இந்து கலோத்தம்
ஸமம்பிகாஸச் சிவம்!
கந்தர்ப்ப கோடி ஸதகுண சுந்தர திவ்யாக்ருதிம்
சிவம் வந்தே!!

**பொழிப்புரை:**

கோடானு கோடி மன்மதர்களின் அழகையும், கவர்ச்சியையும், வெல்லக்கூடிய மிகச்சிறந்த அழகும், கவர்ச்சியும் உடைய சிவபெருமானை நான் சிரம் தாழ்த்தி வணங்குகிறேன். அவனுடைய மலர்ந்த முகமும், கருணையும், கவரும் தன்மை படைத்த புன்னகையும் நம்மை ஆட்கொண்டு விடும். பார்வதி தேவிக்கு தன் உடலின் ஒருபாகத்தை கொடுத்தவரும், தன் சிரஸில் பிறைச்சந்திரனைச் சூடியவருமான சிவபெருமானை வழிபட்டு, அவனது எல்லையில்லா அன்பையும், கருணையையும் அழகு மற்றும் ஆசிகளையும் பெறுவோமாக.

6) மஸ்தக நம கமலாங்கிரிம் ஸம்ஸ்து ஹி போ
வாணி வரகுணோதாரம்
ஹஸ்த யுகார்சய சர்வம் ஸ்வஸ்தோ நிவஸாமி
நிஜ மஹிம்ன்ய முனா!!

**பொழிப்புரை:**

தலையே! சிவபெருமானின் தாமரை போன்ற பாதங்களை வணங்கு. நாவே! உயர்ந்த குணங்களை உடைய சிவபெருமானின் புகழ் பாடு. கரங்களே! மலர்களாலும், பழங்களாலும், வாசனை திரவியங்களாலும்

வழிபாடு செய். இவ்வாறாக உண்மைப் பொருளான சிவபெருமானின் புகழையும், சிறப்பையும் எப்போதும் சிந்தித்து, நான் அமைதியாக தினந்தோறும் வாழ எனக்கு அருள்புரிய வேண்டுகிறேன்.

7) க்லின் னேக்ஷண மதிக்ருபயா ஸன்னுத மஹிமான மாகம
சிரோபி:
தம் நௌமி பார்வதீஸம் பன்னக வரபூஷ ணோ
உஜ்வல கராப்ஜம்!!

**பொழிப்புரை:**

தன் பக்தர்களின் பக்தியை மெச்சி எப்போதும் பொங்கி வழியும் தன் கருணைக் கண்களால் ஆசீர்வதிக்கும் சிவபெருமானே! உன் புகழையும், உயர்வையும் உபநிஷத்துக்கள் விவரித்து கூறியுள்ளன. உன் தாமரை மலரை போன்ற கரங்களை சிறந்த நாகங்கள் ஆபரணங்களாக அலங்கரிக்கின்றன. அப்பேற்பட்ட கருணையும், அன்பும் பொழிகின்ற பரமசிவனே, பார்வதிக்கு தன் உடம்பில் பாதியை கொடுத்தவனே உன் திருப் பாதங்களுக்கு என் பணிவான வணக்கங்கள்.

8) ஸிஸிராருண கஞ்சத்ருஸம் ஸஸி பூஷண மேகம்
அகஸு தாஜானிம்!
பஸுபாஸ பாடனபடும் வஸினம் சர்வஸ்ய தேசிகம் வந்தே!!

**பொழிப்புரை:**

அனைவராலும் அடையத்தக்க வரும் அனைத்து ஜீவன்களையும், சம்சாரம் என்னும் கூண்டிலிருந்து விடுவித்து மோக்ஷத்தை அளிக்கக் கூடியவருமான, உயர்ந்த ஞானாசிரியரும், ஆதிகுருவுமான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியை நான் வணங்கி அடி பணிகிறேன். அழகும், கருணையும் முழுதும் மலர்ந்த செந்தாமரையை ஒத்த கண்களை உடையவரும் பார்வதியின் மணாளனுமான பரமசிவனே! உனக்கு என் பணிவான நமஸ்காரம். உன் தலையிலுள்ள பிறை சந்திரன் கிரீடத்தில் அமைந்த வைரம் போன்றது. அனைவராலும் ப்ரம்மன் என்றும், உண்மைப் பொருள் என்றும், பரமாத்மா என்றும் சிறப்பாக அறியப்பட்ட உயர்ந்த தெய்வமே! உன்னை என்சிரம் தாழ்த்தி வணங்குகிறேன்.

9) வட விட பி நிகட நிலயம் குடிலஜடா கடித ஹிம கரோதாரம்!
கடில ஸிதகரடிக்ருதிம் நிடிலாம் பகமேக மாலம்பே!!

**பொழிப்புரை:**

தன் ஜடாமுடியின் மீது குளிர்ந்த வெள்ளியை ஒத்த கிரணங்களுடன்

ஒளிவிடுகின்ற சந்திரனை ஆபரணமாக அணிந்து ஆலமரத்தின் கீழ் அமர்ந்த சங்கரனை பற்றிக் கொள்கிறேன். மேலும் இடுப்பில்அணிந்துள்ள யானையின் தோல் அவனது இறைத் தன்மையால் ஒளிர்விடுகிறது. தன் நெற்றியில் ஞானம் என்னும் மூன்றாம் கண்ணைப் பெற்றுள்ள அந்த பரமசிவனை நான் சரண் அடைந்து வணங்குகிறேன்.

10) வாமாங்க கலித காந்தம் காமாந்தகம் ஆதி
தைவதம் தாந்தம் !
பூமானந்தகனம் தப்தாம கிமப்யந்த ராந்தரம்
பாதி!!

பொழிப்புரை:

பார்வதி தேவியை தன் இட பாகத்தில் அமர்த்தி இருந்தாலும், ஆதி குருவான தக்ஷிணாமூர்த்தி மிகுந்த சுயக்கட்டுபாட்டுடன் உள்ளவர். ஏனென்றால் சிவன் ஒருவன் தான் மன்மதனை எரிக்க துணிந்தவர். பரமசிவன் தான், அளவற்ற பேரின்பத்தின் அடையாளம். பரிபூரண உண்மைத் தத்துவம், பரப்ரம்மன் என்று விவரிக்க முடியாத உயர்ந்த உணர்தலை நான் உணர்ந்து அதில் ஆழ்ந்துள்ளேன்.

11) யத பாங்கிதாத் ப்ரபோதாத் பதமலபே கண்டி தாத்ம
மாத்ரமஹம் !
ஸதயம் சாம்பசிவம் தம் மதனாந்தகம் ஆதிதைவதம்
நௌமி!!

பொழிப்புரை:

காமத்துக்கும், பேரார்வத்துக்கும் தேவனாகிய மன்மதனை எரித்த சாம்ப சிவனை நான் சிரம் தாழ்த்தி வணங்குகிறேன். அவனுடைய கருணை கடாக்ஷம் என்மேல் பட்டவுடன், நான் விழிப்படைந்த ஆத்ம ஞானத்தை பெற்று "தத்வமசி" என்ற அறிவைப் பெற உதவியது.

12) சௌஸ் நாதிகம் அம்ருதஜலை: சுஸ்மித வதனேந்து
ஸமுதித திகந்தம்!
ஸம்ஸ்து தம் அமரகணை ஸ்தம் நிஸ் துல மஹிமான
மானதோஸ்மி சிவம்!!

பொழிப்புரை:

எட்டு திசைகளிலும் தன் மதிவதனத்தாலும், மெல்லிய புன்னகையாலும் பிரகாசிக்கச் செய்து, தன் பக்தர்கள் அனைவரையும், ஆனந்தத்தில் திளைக்கச் செய்து, வழிபாடு, சடங்குகள், தவம், தியானம் போன்றவற்றில் ஆழ்ந்து ஈடுபாட்டுடன், உயர்ந்த சாதனையான இறை எண்ணத்தில் சிறந்த

நிலையை அடைந்த பக்தர்களை அன்புடன் விசாரித்து வழிநடத்தும் அந்த பரமசிவனை நான் நமஸ்கரித்து என்னை முழுவதும் அர்ப்பணிக்கின்றேன். எல்லா தேவர்களின் இதய பூர்வமான பிரார்த்தனையாலும், சுலோகங்களாலும், புகழுரைகளாலும், வழிபடப்படும் இறைவனை நானும் மீண்டும் மீண்டும் சிரம் தாழ்த்தி வணங்கி அவனுடைய அளவிட முடியாத அருளைப் பெற விரும்புகின்றேன்.

13) நவ வர்ண ரத்னமாலா ஸ்துதி மேதாம் ஆதி தேசி
கேந்த்ரஸ்ய!
தாரயத: ஸ்யாத்புக்தி: ஸகல கலா வாப்திரத பராமுக்தி!!

**பொழிப்புரை:**

யார் ஒருவர் ஆதி குருவான தக்ஷிணா மூர்த்தியின்மேல் இயற்றப்பட்டுள்ள நவ வர்ண ரத்னமாலா என்ற இந்த சுலோகத்தை பாராயணம் செய்து அதைப்பற்றிய சிந்தனையில் ஈடுபட்டுள்ளாரோ அவர் எல்லா மகிழ்ச்சியையும், சுகங்களையும் பெற்று இவ்வுலகில் இன்புறுவர். மேலும் எல்லா துறைகளிலும் திறமையைப் பெற்று முழுமையடைந்து உயர்ந்த நிலையான இறை உணர்வு எனும் மோக்ஷத்தை அடைவர்.

## சதாசிவ ப்ரம்மேந்திராள் சித்து

சதாசிவ ப்ரம்மேந்திராள் கரூரில் சுற்றிக்கொண்டிருக்கும் சமயம் சிறுவர், சிறுமியர் இவருடன் சகஜமாக பழகுவார்கள். சதாசிவமும், தன்னை பார்க்க வரும் பக்தர்களிடம் வாங்கிய இனிப்பு பலகாரங்கள், பழங்கள் எல்லாவற்றையும் சிறுவர்களுக்கு கொடுத்து மகிழ்வார். ஒரு சமயம் மதுரையில் திருவிழா நடந்து கொண்டிருந்தது. சிறுவர்கள் தங்கள் பெற்றோர்களிடம் மதுரையில் நடக்கும் திருவிழா பற்றி கேட்டறிந்து சதாசிவ ப்ரம்மேந்திராளிடம் திருவிழா பார்க்க ஆவலாய் உள்ளது என கூறி உள்ளார்கள். இதைகேள்விப்பட்ட அவர், நான் உங்களை திருவிழா பார்க்க அழைத்து செல்கிறேன் எனக் கூறியுள்ளார். திருவிழா பார்க்கும் ஆர்வத்தில் சிறுவர்கள் சம்மதித்தார்கள். சதாசிவம் இருகைகளையும் கோர்த்து தலையில் வைத்துக்கொண்டு இருகைகளிலும் சிறுவர்களை பற்றிக்கொள்ளச் சொல்லி கண்களை மூடிக்கொள்ளச் செய்தார். அவர்கள் கையில் தொங்கிய உடன் ஆகாய மார்க்கமாக அழைத்து சென்று மதுரையில் திருவிழா நடக்கும் இடத்தில் இறக்கி விட்டு கண்களை திறக்கச் சொன்னார். மதுரையில் நடந்த திருவிழாவை பார்த்து சிறுவர்கள் மிகவும் சந்தோஷப் பட்டார்கள். திருவிழா பார்த்து முடிந்தவுடன் சுவாமி சிறுவர்களை அழைத்து சென்றதுபோல் திரும்பவும் கரூர் கொண்டு வந்து சேர்த்து விட்டார். சிறுவர்கள் தாங்கள் திருவிழா பார்த்த விவரத்தை தங்கள் பெற்றோரிடமும், மற்றவர்களிடமும் கூறி மகிழ்ந்தார்கள்.

உ

ஓம் ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மணே நம:

## ஸ்ரீசதா சிவ ப்ரஹ்மேந்திரர் அருளிய
## ஸர்வ பாபஹர மஹா பாபக்னம் ச சிவஸ்தோத்ரம்

1) ஆஷா வஷாதஷ்ட திகந்தராயை தேஷாந்தரப்ராந்தம்
அஷாந்த புத்திம் !
ஆகாரமாத்ராத வனிசுரம் மாம் அக்ருத் யக்ருத்யம்
சிவ பாஹி ஸம்போ!!

**பொழிப்புரை:**

ஓ சிவ பிரானே! என் சுய நலத்திற்கான எட்டுத்திக்குகளிலும் மூலை முடுக்குகளிலும் சுற்றித்திரிந்த என்னை மன்னித்து காப்பாயாக! வீணான முயற்சிகளாலும் அதனால் விளைந்த ஏமாற்றங்களாலும் நான் உடலாலும், மனத்தாலும் தளர்ந்து விட்டேன். ஓ சம்போ! நான் பிறப்பால் மட்டுமே பிராமணன். ஆனால் பிராமணர்கள் செய்யத்தகாததை எல்லாம் செய்த என்னை மன்னித்து ரட்சிப்பாயாக!

2) ஸம்ஸார மாயா ஜலதிப்ரவாஹ ஸம் மக்ன முதப்ராந்தம்
அஷாந்தபுத்திம்
த்வத்பாத சேவா விமுகம் ஸகாமம் ஸுதுர்ஜனம் மாம்
சிவ பாஹி ஸம்போ!!

**பொழிப்புரை:**

ஓ சம்புவே! சம்சார சாகரத்தில் மூழ்கி கொடிய அலைகளான இன்பம், துன்பம், வலி, சுகம், நன்மை, தீமை இவைகளால் அங்கும் இங்கும் அலைக்கழிக்கப்பட்டு துவண்டுபோன என்னை மன்னிப்பாயாக!

ஓ பரமசிவா! உன்னை எப்போதும் வழிபடாமலும், உனக்கு எந்த சேவையும் புரியாது துன்பக்கடலில் அகப்பட்டு எல்லா இழிவும்பட்டுத் துவண்டு கிடக்கும் இந்தக் கோழையை மன்னித்து பாதுகாத்து அருள்வாயாக! உன்னையே நான் இப்போது சரண் அடைகிறேன். என்னை தயவு செய்து காப்பாற்றி அருள் புரிவாயாக! ஓ கருணைக்கடலே!

3) இஷ்டான்ருதம் ப்ரஷ்டம் அனிஷ்டதர்மம் நஷ்டாத்ம போதம்! நயலே சஹீனம்
கஷ்டா ரிஷட்வர்க நிபீடி தாங்கம் துஷ்டோத்தமம் மாம் சிவ பாஹி ஸம்போ!!

**பொழிப்புரை:**

ஓ சிவ பிரானே! எப்போதும் நான் பொய்யே பேசி, முறை தவறி, நன்னடத்தையும், நல்வழியும் தவறி வாழ்ந்த என்னை தயவு செய்து மன்னித்து நீதான் காத்து அருள வேண்டும். பிரபுவே! இறைவழி வாழத்தவறிய என்னை நீதான் காக்க வேண்டும். சிவ பிரானே!

காம, குரோத, லோப, மோக, மத, மாஸ்சர்யம் என்னும் ஆறு

விரோதிகளால் துன்பப்பட்ட கோழையான என்னை தயவு செய்து மன்னித்து கருணையை பொழிவாய்! ஓ சிவபிரானே!

4) மாம் ஸாஸ்தி மஜ்ஜா மலமூத்ர பாத்ர காத்ரா பி
மானோஜ்ஜித க்ருத்ய ஜாலம் !
மத்பாவனம் மன்மத பீடிதாங்கம் மாயாமயம் மாம்
சிவ பாஹி ஸம்போ!!

பொழிப்புரை:

அருவருக்கத் தக்க மாமிசம், எலும்பு, கொழுப்பு, மலம், மூத்திரம் போன்றவற்றால் ஆகிய இவ்வுடலின் மீது எல்லையற்ற பற்றும், பாசமும் வைத்து சிற்றின்பத்திலேயே உழன்ற என்னை பாதுகாத்து காப்பாற்றுவாயாக! மஹாசிவனே! உலக சுகத்திலேயே கவரப்பட்டு என் மதி இழந்து தவறான எண்ணங்களாலும், செயல்களாலும் சிற்றின்பமே கதி என்று திரிந்து, உடலாலும் உள்ளத்தாலும் நலிவடைந்த என்னைக் காக்க நான் உன்னையே சரண் அடைகின்றேன். மஹாபிரபுவே! நீதான் என்னை கருணையுடன் காக்க வேண்டும்.

5) வேதாகமாப்யாஸ ரஸான பிக்னம் பாதார விந்தம்
தவ நார்ச்ச யந்தம்!
வேதோக்த கர்மாணி விலோ பயந்தம் வேதாக்ருதேமாம்
சிவ பாஹி ஸம்போ!!

பொழிப்புரை:

வேதம், ஆகமம் போன்றவற்றின் வாசனை கூட என்மேல் பட்டதில்லை. அவற்றை பற்றிய வழிமுறைகளோ, ஞானமோ எனக்கு தெரியாது. உன் தாமரை போன்ற பாதங்களை வணங்கவில்லை. தினசரி அனுசரிக்க வேண்டிய வாழ்வியல் முறைகளோ, வழிபாட்டு முறைகளோ அல்லது வேத ஆகமங்களை பற்றியோ நான் அறியவில்லை. இது நான் செய்த மகாபாதகச் செயல் அல்லவா?

நான்கு வேதங்களின் உட்பொருளாகிய நீதான், நான் செய்த, செய்ய தவறியவற்றை மன்னித்து காத்தருள வேண்டும். ஓ மகா பிரபுவே, எனக்கு நீதான் வழிகாட்டி பாதுகாக்க வேண்டும். நான் மீண்டும் மீண்டும் உன்னடி பணிகின்றேன்.

6) அந்யாய வித்தார் ஜனம் ஸக்த சித்தம் அன்யா ஸு
நாரிஷ் வனுராக வந்தம் !
அந் ந்யான்ன போக்தாரம ஸுத்த தேஹம் ஆசார
ஹீனம் சிவ பாஹி ஸம்போ!!

**பொழிப்புரை:**

ஓ மஹா பிரபுவே! எப்போதும் பிறருடைய சொத்தை அனுபவித்தும், வழி தவறிய முறைகளில் சம்பாதித்தும், மாற்றான் மனைவியின் மேல் பற்று வைத்தும் வாழ்ந்த இப்பாவியை மன்னித்து நீதான் காத்து ரக்ஷிக்க வேண்டும்.

ஓ மகா பிரபுவே! உடலாலும் மனத்தாலும் வழி தவறி வாழ்ந்த நான் திருந்தி வாழ விரும்புகிறேன். மஹா பிரபுவே! என் மேல் கருணை கூர்ந்து காப்பாயா?

7) புராத்ததா பத்ர யதப்த தேஹம் புராங் கதிம் கந்தும்
உபாய வர்ஜம் !
புராவமானைக புராத்ம போதம் நராதமம் மாம்
சிவ பாஹிஸம்போ!!

**பொழிப்புரை:**

ஓ மஹா பிரபுவே! நான் முப்பெரும் தோஷங்களால் பாதிக்கப்பட்டு எல்லா மனிதர்களிலே மிகவும் இழிவானவன். என்னுடைய கடந்த கால தவறான நடவடிக்கைகளாலும், செயல்களாலும் அனைவராலும் பழிக்கப்பட்டு இழிநிலை அடைந்து வழி தவறி, எங்கு செல்வது, எப்படி செல்வது என்று அல்லலுற்று அவதிப்படுகின்றேன். ஓ மஹா பிரபுவே! என் மேல் கருணை கூர்ந்து இந்த இழிநிலையிலுள்ள என்னை, ரட்சித்து கரம் கொடுத்து உயர்த்தமாட்டாயா?

8) பிதா யதா ரக்ஷதி புத்ரம் ஈஷ ஜகத் பிதாத் வம்
ஜகத: ஸஹாய:
க்ருதா புராதம் தவ சர்வகார்யே க்ருபாநிதே மாம்
சிவ பாஹி ஸம்போ!!

**பொழிப்புரை:**

ஓ மஹா பிரபுவே!, ஒரு குழந்தை தன்னைக் காப்பாற்ற எப்படித் தன் தந்தையை அணுகுமோ, அப்படி நான், உன்னிடம் சரண் அடைகின்றேன். ஓ கடவுளே! நீ இவ்வுலகத்துக்கே தந்தை. கருணைக் கடலும் நீயே!. அனைவரின் குற்றங்களையும் மன்னித்துக் காத்து அருளும் இறைவனும் நீயே!. நான் செய்த தவறுகள் கணக்கற்றவை. முறையற்ற வாழ்வையே வாழ்ந்து உடலாலும், மனத்தாலும் துன்பப்படும் என்னை காத்தருள வேண்டும். எனக்குவேறு கதி என்ன? நான் திருந்தி நல் வழியில் வாழ்ந்து நல்வழியில் நடக்கவேண்டி உன்னையே சரணடைகிறேன். கடவுளே! தாமரை போன்ற உன் பொற்பாதங்களைப் பணிகின்றேன்.

ஓம் ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மணே நம:

# ஸ்ரீ சிவ மானஸிக பூஜா ஸ்தோத்ரம்

1) அனுசிதம நுலபிதம் மே
த்வயி நநு ஸம்பே⁴ா ததா³க³ ஸ: ஸாந்த்யை!
அர்சாம் கத² மபி விஹிதாம்.
அங்கீ³ குரு ஸர்வ மங்க³லோ பேத!!

**விளக்கம்:**

சம்புவே! உன்னை பற்றி பொருத்தமற்றது, நிச்சயமாக என்னால் பிதற்றப்பட்டது. அந்தக் குற்றத்திற்கு சாந்திக்காக நியமமாகச் செய்யும் பூஜையை எப்படியோ ஒருவாறு ஏற்றுக்கொள். பார்வதியோடு கூடியவனே! (ஸர்வ மங்கலா என்பது தேவியின் பெயர்)

2) த்⁴யாயாமி கத²மிவத்வாம்
தீ⁴வர்த்ம-விதூ³ர-தி³வ்ய-மஹி மாநம்!
ஆவாஹநம் விபோ⁴ ஸ்தே³
தே³வாக்³ர்ய ப³வேத் குத: ஸ்த²ாநாத்!!

**விளக்கம்:**

புத்தி மார்க்கத்திற்கு அப்பாலுள்ள திவ்வியமான மகிமையையுடைய உன்னை எவ்வாறு தான் தியானம் செய்வேன்!. தேவர்களுள் முதல்வனே! தலைவனே! குறிப்பிட்ட எந்த இடத்திலிருந்து எங்கும் வியாபித்திருக்கும் உன்னை ஓரிடத்தில் அழைத்து எழுந்தருளச் செய்வது எப்படி?

3) கியத்³ ஆஸநம்¹ ப்ரகல்ப்யம்
க்ரு தாஸநஸ்யேஹ ஸர்வதோ(அ) பிஸிவ!
பாத்யம்¹ குதோ அர்க்⁴யம் அபிவா (ஆ)
பாத்³யம் ஸர்வத்ரபாணி பாத³ஸ்ய!!

**விளக்கம்:**

சிவபெருமானே! எங்குமே அமர்ந்திருப்பவனுக்கு இங்கே எவ்வளவு பெரிய ஆஸனம் அமைக்க வேண்டும்? எல்லாப்புறத்திலும் கைகால்களையுடையவனுக்கு பாத்யமோ அல்லது அர்க்கியமோ எவ்வாறு சமர்ப்பிக்க முடியும்?.

4) ஆசமநம் தே ஸ்யாத்3 அபி
ப4க3வந் ப4வ ஸர்வ தோமுக2ஸ்ய கத2ம்!!
மது2பர்கோ வா கத2மிஹ
மது4-வைரிணி த3ர்ஸித ப்ரஸாத3ஸ்ய!!

**விளக்கம்:**

பவனே! பகவானே! எல்லாப்புறமும் முகங்களையுடைய உனக்கு ஆசமனமும் அதாவது மந்திரத்தை உச்சரித்து ஜலத்தை உட் கொள்ளச்செய்வதும் எப்படி முடியும்?. அல்லது இங்கே மதுபர்க்கம் (தேன், தயிர்,கற்கண்டு,ஜலம் இவற்றைக் கொண்டு கலந்த பானம்) மது என்னும் அரக்கனைப் பகைத்து ஸ்ம்ஹாரஞ் செய்த விஷ்ணுவிடத்தில் அருளைக் காட்டியவனுக்கு எப்படி பொருந்தும்?

5) ஸ்நாநேந கிம்1 விதே4யம்
ஸலில க்ரு1தேநேஹ நித்ய சுத்3த4ஸ்ய!
வஸ்த்ரே ணாபிந கார்யம்
தே3வாதி3 பதே தி3க3ம்ப3ரஸ்யேஹ!!

**விளக்கம்:**

எப்பொழுதும் பரிசுத்தமாயிருப்பவனுக்கு இங்கே தீர்த்தத்தாலே செய்யும் ஸ்நானத்தால் ஆக வேண்டியது என்ன? தேவர்களுக்குத் தலைவனே! திசைகளையே ஆடையாகவுடைய உனக்கு இங்கே வஸ்திரத்தாலும் பயன் இல்லை.

6) ஸ்பு2ரதி ஹி ஸர்பா ப4ரணம்1
ஸர்வாங்கே3 ஸர்வ மங்க3லாகார:
அதிவர்ணா ஸ்ரமிணஸ் தே (அ)
ஸ்த்யுபவிதே நேஹ க:ஸ்சித்3 உத்கர்ஷ!!

**விளக்கம்:**

பார்வதியை தேகத்தில் உடையவனே! ஸர்ப்பங்களாகிய ஆபரணம் எல்லா அவயங்களிலும் மின்னுகிறதே! வர்ணாசிரம நெறிகளைக் கடந்த உனக்கு இங்கே பூணூலால் என்ன தான் மேன்மை உண்டு?

7) க3ந்த4வதீ ஹி தநுஸ்தே
க3ந்த4ா: கிம்1 நேஸ வௌ நருக்த்யாய?
புஷ்கர-ப2ல-தா3தாரம்
புஷ்கர-குஸுமேந பூஜயே கிம்1த்வாம்!!

**விளக்கம்:**

ஈசனே! உன் சரீரம் சுகந்தமுடையது அன்றோ? வாசனை

திரவியங்கள் மிகையாவதற்கே அல்லவா? நிரம்பிய பலனையளிக்கும் உன்னை தாமரைப் பூவாலே நான் பூஜிப்பதா?

(குறிப்பு: பூ உதிர்ந்து தானே பழம் ஆகும்? பழத்தை கொடுப்பவனுக்கு பூவை கொடுப்பதா?)

8) ஸம-த4ந-முல-த4நம்1 த்வம்1
ஸகலேஸ்வர ப4வஸி தூ4பித: கேந!
தீ3ப: கத2ம் ஸிக2ா வாந்
தீ3ப்யதே புர: ஸ்வயம் ப்ரகா ஸஸ்ய॥

**விளக்கம்:**

எல்லோருக்கும் ஈஸ்வரனாக இருப்பவனே! சமம் என்னும் செல்வத்தை நீ கொண்ட முனிவர்களுக்கு மூலதனமான நீ யாரால் துன்புறுத்தப்பட்டவனாக ஆகிறாய்? தானே சோதி மயமாயுள்ளவனுக்கு முன்னால் தீபம் எப்படி ஜ்வாலையுடையதாய் பிரகாசிக்கும்.

9) அம்ரு1தாத் மகம் அபி ப4க3வந்
ந ஸநம்1 கிம்1 நாம நித்யத்ரு1ப்தஸ்ய!
த்வய்யாம் ரேடி3தம் ஏதத்
தாம் பூ3லம் யத்3இஹ ஸுமுக2 ராகே3(அ)பி!!

**விளக்கம்:**

பகவானே! அமுதமயமான உணவேயாயினும் எப்பொழுதும் திருப்தியடைந்திருப்பவனுக்கு ஏனோ சிவந்த வாயையுடைய உனக்கு இந்த வெற்றிலையென்பதும் பயனற்ற மிகைப்பொருளே!

சிலேடைக்குறிப்பு: ஸுமுகராக: 1) சுக துக்கங்கள் என்ற த்வந்த்வங்களால் மாறாத முக சோபையுள்ளவன் (2) நன்றாக சிவந்த வாயை யுடையவன்.

10) உப ஹாரீபூ4யாத் 3இத3ம்
உமேஸ யந்மே விசேஷ்டிதம் அஸேஷம்!
நீராஜயாமி தம் இமம்1
நாநாத் மாநம்1 ஸ ஹாகி2லை: கரணை: !!

**விளக்கம்:**

உமாதேவியின் நாதனே! என்னாற் செய்யப்பட்டதான இது முழுவதும் உனக்கு வழிபாடாக அமையட்டும். பல வடிவுகளையுடைய வனாக உள்ள தங்களை மெய், வாக்கு, மனம் ஆகிய மூன்று கரணங்களாலும் ஒளி பெறச்செய்கிறேன்.

11) ஸுமந: சேகர ப$^{4}$வதே

ஸுமநோ (அ) ஞ்ஜலிரேஷ கோ ப$^{4}$வேச்ச$^{2}$ம் போ$^{4}$!

சத்ரம் த்$^{3}$யுமந்த் $^{3}$யுமூர்த்$^{4}$ நஸ்

சாமரமபி கிம்$^{1}$ ஜிதஸ்ரமஸ் யதவ॥

<u>**விளக்கம்:**</u>

பவதேவனே! சம்புவே! தேவர்களுக்குத் தலைவனே! மலர் சூடிய திருமுடியுடையவனே! உனக்கு கைகூப்பி சமர்ப்பிக்கும் இந்த புஷ்பம் என்ன ஆகும்? ஏ ஒளியுடையவனே! வானத்தை தலையாகவுடையவனுக்கு குடையும், சிரமத்தை வென்ற உனக்கு சாமரமும் ஏன்?

குறிப்பு: மலர்ந்த பூக்களை தலையிலணிந்தவனுக்கு மலராது கூம்பிய மொட்டு போன்ற புஷ்பாஞ்ஜலி எதற்கு? வானத்திற்கு அப்பால் ஊடுருவிச் செல்லும் தலைக்கு மேலே குடைபிடிப்பது எப்படி?.

12) ந்ருத்$^{1}$யம் ப்ரத$^{2}$தாம்$^{1}$ கத$^{2}$மிவ

நாத$^{2}$தவாக்$^{3}$ரே மஹா நடஸ்யே ஹ!

கீ$^{3}$தம்$^{1}$ கிம்$^{1}$ புரவைரிந்

கீ$^{3}$தாக$^{3}$ ம–மூல–தே$^{3}$ சி கஸ்ய புர:

<u>**விளக்கம்:**</u>

நாதனே! இங்கே மஹா நடனாகிய உன் முன்னிலையில் எவ்வாறு தான் நடனம் நடக்கும்? பகை கொண்டு முப்புரங்களை அழித்தவனே! ஸங்கீத சாஸ்திரத்திற்கு மூலமான ஸாம வேதத்தின் ஆதிகுருவிற்கு முன் என்ன ஸங்கீதம்?

13) வாத்$^{3}$யம்$^{1}$ ட$^{3}$மரு$^{1}$ப்ரு தஸ்தே

வாத$^{3}$யிதும்$^{1}$ வாபரே (அ)ஸ்தி காஸக்தி:!

அபரச்சி$^{2}$ந்நஸ்ய ப$^{4}$வேத$^{3}$ கி$^{2}$லே ஸ்வர

க: ப்ரத$^{3}$க்ஷிண விதி$^{4}$ ஸ்தே!!

<u>**விளக்கம்:**</u>

அல்லது, டமருகத்தை ஏந்திய உனக்கு முன் வாத்தியத்தை வாசிப்பதற்கு வேறொருவனிடத்தில் என்ன திறமை இருக்கிறது?. எல்லாவற்றிற்கும் ஈசுவரானாய் இருப்பவனே! பரிச்சேதித்துப் பிரிக்க வொண்ணாத உன்னைக் குறித்து எவ்விதம் பிரதக்ஷிணஞ் செய்வதாகிய நியமம் இருக்கக்கூடும்?

14) ஸ்யுஸ்தே நமாம்$^{1}$ ஸிகத$^{2}$மிவ

ஸங்கர பரிதோ(அ)பி வித் $^{3}$ய மாநஸ்ய!

வாசாம கே $^{3}$ாசரே த்வயி

வாக்ப்ரஸரோ மே கத $^{2}$ந்நு ஸம்ப$^{4}$வது!!

**விளக்கம்:**

சங்கரனே! எல்லாப் புறத்திலும் இருப்பவனான உனக்கு நமஸ்காரங்கள் எப்படி ஆகக்கூடும்? வாக்குகளுக்கு எட்டாதவனான உன்னைப்பற்றி ஸ்துதி வார்த்தை வெளிப்படுவதானது எனக்கு எவ்வாறு தான் நேரக்கூடும்?

15) நித்யா நந்த³ாய நமோ
நிர்மல–விஜ்–ஞாந–விக்³ ரஹாய நம:!
நிரவதி⁴ கருணாய நமோ
நிரவதி⁴–விப⁴வாய தேஜ ஸே (அ) ஸ்து நம:!!

**விளக்கம்:**

எப்பொழுதும் ஆனந்த மயமானவனுக்கு நமஸ்காரம். மாசில்லாத நல்ல அறிவே வடிவமானவனுக்கு நமஸ்காரம். எல்லையில்லாத கருணையுடையவனுக்கு நமஸ்காரம். எல்லையில்லாத மேன்மைகளை, பெருமைகளை, திறமைகளையுடைய சோதி வடிவனுக்கு நமஸ்காரம் அமைவதாகுக.

16) ஸரஸிஜ விபக்ஷ சூட³:
ஸக³ர–தநூஜ–ஜந்ம–ஸுக்ருத்–மூர்த⁴ா (அ)ஸௌ?
த்³ருக் கூலங்கஷ–கருணோ
த்³ரு ஷ்டிய தே²மே (அ)ஸ்து த⁴வலிமா கோ(அ)பி!!

**விளக்கம்:**

தாமரைக்குப் பகையான சந்திரனைத் திருமுடிக்கு ஆபரணமாக வுடையதும், ஸகர வம்சத்தில் பிறந்தவர்களைப் பாவனஞ் செய்த கங்கையைத் தலையிலே கொண்டதும், கண்களினின்றும் கரைபுரண்டு வெள்ளமாகப் பெருகும் கருணையை வடிவமாயுடையதுமான ஒப்பற்ற ஒரே வெண்மைப் பொருளான இது எனக்கும் கண் பார்வையில் இருப்பதாகுக.

17) ஜக³த்³ ஆத⁴ார–ஸராஸம் ¹
ஜக ³த்³ உத்பாத³ ப்ரவீண யந்தாரம்!
ஜக ³த்³–அவந–கர்மட²–ஸரம்
ஜக³த்–உத்³தாரம் ஸ்ரயாமி சித்ஸாரம்!!

**விளக்கம்:**

ஜகத்திற்கு ஆதாரமான மேருமலையை வில்லாகக் கொண்டவனும், ஜகத்தை உற்பத்தி செய்யும் வல்லமையுடைய பிரமனை தேரோட்டியாகக் கொண்டவனும், ஜகத்தை காக்கும் தொழிலில் ஈடுபட்ட விஷ்ணுவை அம்பாக கொண்டவனும், ஜகத்தை ஆபத்திலிருந்து கைதூக்கி விடுவோனுமான, சின்மய பொருளானவனை சரணமடைகிறேன்.

18) குவ லய – ஸத்ருக்ஷோர்த்வ–க3லை:
குல–கி3ரி–சவடஸ்த2–குசப4ரார்த3ாங்கை3:!
கலுஷ–விதூர3 ரைஸ் சேத:
கபலிதம் ஏதத் க்ரு பாரஸை: கைஸ்ச!!

<u>**விளக்கம்:**</u>

நீலோத் பலத்தோடு போரிடும் கழுத்தையுடையவர்களும், குல பர்வதங்களுக்கு மூதாதை போன்ற ஸ்தன பாரத்தைப் பாதி யுடம்பிலே உடையவர்களும் என்ற பாடத்திற்கு குலபர்வதங்களின் கொடுமுடி களிலேயுள்ள பனிக்கட்டியால் (பார்வதி தேவியால் மூடப்பெற்ற பாதியுடம்பையுடைவர்களும் என்பது பொருள்) துன்பங்களுக்கு அப்பால் உள்ளவர்களும், கிருபை என்னும் அமுதத்தையுடைவர்களுமான ஒருவர்களாலேயே இந்த மனமானது விழுங்க பட்டு ஒழிந்தது.

19) வஸநவதே கரி–க்ருத்யா
வாஸவதே ரஜத–ஸைல–சிக2ரேண!
வலயவதே பே4ாக3.ப்4ருதா
வநிதா (அ)ர்த4ாங்கா3ய வஸ்துநே (அ) ஸ்து நம!

<u>**விளக்கம்:**</u>

யானைத்தோலால் ஆடையையுடையதும், வெள்ளிமலையின் கொடுமுடியால் வாஸஸ்தானமுடையதும், ஸர்ப்பங்களால் வளையல் களையுடையதுமாயுள்ள பெண்ணைப் பாதியுடலாகக் கொண்ட பொருளுக்கு நமஸ்காரம் இருக்கட்டும்.

20) ஸரஸிஜ–குவலய–ஜாக3ர
ஸம் 1வே ஸந ஜாக3ருக லோசநத:!
ஸக்ரு1த3பி நாஹம் 1ஜாநே
ஸுரம் இதரம்1 ப4ாஷ்யகார–மஞ்ஜீ ராத்!!

<u>**விளக்கம்:**</u>

ஏக காலத்தில் தாமரை, குவளை இவற்றின் மலர்தல் விஷயத்திலும், கூம்புதல் விஷயத்திலும் ஜாக்கிரதையுடனிருக்கும் கண்களையுடையவனும் பாஷ்யகாரரான பதஞ்ஜலியை நூபுரமாக வுடையவனுமான சிவ பெருமானைக் காட்டிலும் வேறொரு தேவனை நான் அறியேன்.

21) ஆபாடல–ஜாடா நாம்
ஆநில–ச் ச2ாய–கந்த4ரா ஸீம் நாம்!

ஆபாண்டு 3–விக்3ரஹணாம்
ஆ.த்3ரு ஹிணாம் 1 கிங்கரா வயம் 1மஹஸாம்!!

**விளக்கம்:**

பாதிரிப்பூ போன்று சிறிதே சிவந்த சடையுடைவர்களும் கழுத்தின் பின்புறம் வரையிலே பரவிய நீலநிறத்தின் காந்தியையுடையவர்களும், வெண்ணிற மேனியையுடைவர்களுமான சோதி மூர்த்திகளுக்கு பிரமன் முதற்கொண்டு நாங்கள் எல்லோரும் சேவகஞ் செய்பவர்கள்.

22) முஷித–ஸ்மராவ லேபே
முநி–தநயாயுர்–வதாந்ய பத3 பத்3மே!
மஹஸி மநோ ரமதாம்மே
மஹதி தயா (ஆ) பூர–மேது3ராபாங்கே3!!

**விளக்கம்:**

மன்மதனுடைய கர்வத்தை அபகரித்தவனும் முனி குமாரன் மார்க்கண்டேயனுக்கு ஆயுளை அளித்தவள்ளலான திருவடித் தாமரையையுடையவனும் தயையாலே நிறைந்து மெதுவான கடைக்கண் களையுடைவனுமான பெருஞ்சோதி மூர்த்தியிடத்தில் என் மனது இன்புறுவதாகுக.

23) ஸர்மணி ஜக3தாம்1 கி3ரிஜா
நர்மணி ஸப்ரேம–ஹ்ரு‘த3ய–பரிபாகே!
ப்ரஹ்மணி விநமத்3–ரக்ஷண
கர்மணி தஸ்மிந்நு தே3து ப4க்திர்மே!!

**விளக்கம்:**

ஜகத்திற்கு இன்ப மயமானவனும், பார்வதி தேவியோடு இன்புறுவோனும் பிரேமையால் இருதயம் இளகிப் பக்குவமானவனும், தன்னை வணங்குவோரைக் காப்பாற்றுவதையே தொழிலாக கொண்டவனுமான அந்த பரப்ரம்மனிடத்தில் எனக்கு பக்தியானது எழுவதாகுக.

24) அஸ்மிந் நபி ஸமயே மம
கண்ட2–ச்ச2ாயா–விதூ4த– காலாப்4ரம்!
அஸ்து புரோ வஸ்து கிம
ப்யர்தா4ங்கே 3–த3ாரம் உந்மிஷந்நிடிலம்!!

**விளக்கம்:**

கழுத்தின் நிறத்தால் காள மேகத்தை வென்றதும், திருமேனியிற்

பாதியிலே மனைவியையுடையதும் ஒளிரும் நெற்றியையுடையதுமான சொல்ல வொண்ணாத ஒரு பொருள் இந்த வேளையிலும் என் முன்பாக இருப்பதாகுக.

25) ஜடிலாய மௌலி–ப$^{4}$ாகே$^{3}$
ஜல–த$^{4}$ர நீலாய கந்த$^{4}$ரா (ஆ) பே$^{4}$ாகே!
த$^{4}$வலாய வபுஷி நிகி$^{2}$லே
த$^{4}$ாம் நே ஸ்யாந்மாமகோ நமோவாக:!!

**விளக்கம்:**

தலையில் ஜடையையுடைவனும், கழுத்துப் பிரதேசத்திலே நீருண்ட மேகத்தைப்போன்ற கருநீல நிறமுடையவனும், திருமேனி முழுவதிலும் வெண்ணிற முடையவனுமான சோதி மூர்த்தியினிடத்து நான் கூறும் நமஸ்காரம் அமைவதாகுக.

26) அகர–விராஜத்–ஸும்ருக்கை$^{3}$ர்
அவ்ரு$^{1}$ஷ–துரங்கை$^{3}$ர் அ மௌலி த்$^{4}$ரு$^{1}$த–க$^{3}$ங்கை$^{3}$:!
அக்ரு$^{1}$த மநோப$^{4}$வ–ப$^{4}$ங்கை$^{3}$ர்
அலம் அந்யைர்–ஜக$^{3}$தி தை$^{3}$ வாதாபஸதை$^{3}$:!!

**விளக்கம்:**

அழகிய மான் ஒன்று பிரகாசியாத கையையுடையவர்களும், காளையைப்பரியாகக் கொள்ளாதவர்களும், திருமுடியிலே கங்கையைத் தாங்காதவர்களும் மன்மதனை பங்கப்படுத்தாதவர்களுமான பரமேசுவரனைத் தவிர நீச தெய்வங்கள் உலகத்தில் தேவையில்லை.

27) கஸ்மை வச்மி த$^{3}$ஸாம்$^{1}$மே
கஸ்யேத்$^{3}$ருக்$^{3}$க்$^{4}$ரு$^{1}$த$^{3}$யம் அஸ்தி ஸக்திர்வா!
கஸ்ய ப$^{3}$லம் சோத்$^{3}$த$^{4}$ர்தும்
க்லேஸாத் த்வாம் அந்தரா த$^{3}$யாஸிந்தே$^{3}$ா!!

**விளக்கம்:**

தயா சமுத்திரமாயிருப்பவனே! உன்னை தவிர்த்து யாருக்கு என் கஷ்ட நிலையை சொல்வேன்?. யாருக்கு இத்தகைய இருதயமோ, சக்தியோ உண்டு? மேலும் துன்பத்தினின்றும் கைதூக்கி விடுவதற்கு யாருக்கு பலம் உண்டு?

28) யாசே ஹ்யநபி$^{4}$நவம்$^{1}$தே
சந்த்$^{3}$ரகலோத்தம் ஸகிஞ்சித்$^{3}$ அபிவஸ்து!
மஹ்யம்$^{1}$ ப்ரதே$^{3}$ஹி ப$^{4}$க$^{3}$வந்
மதியமேவ ஸ்வரூபம் ஆநந்த$^{3}$ம் !!

**விளக்கம்:**

சந்திர கலையை திருமுடியில் ஆபரணமாகத் தரிப்பவனே! பழைய பொருள் ஒன்றையே உன்னிடம் யாசிக்கிறேன் பகவானே!. என்னுடையதான ஆனந்த சொரூபத்தையை எனக்கு கொடுப்பாயாக.

29) ப⁴க³வந்ப³ால தயா வா (அ)
ப⁴க்த்யா வா (அ)ப்யாபத்³–ஆகுல தயாவா!
மோஹா விஷ்ட தயா வா
மா (அ) ஸ்துசதே மநஸியத்³து³ருக்தம் மே!!

**விளக்கம்:**

பகவானே! சிறு பிள்ளைத்தனத்தாலோ அல்லது பக்தியின்மையாலோ ஆபத்துக்களாலே மனங் கலங்கியதாலோ, மோஹம் என்னுள்ளே புகுந்து கொண்டிருப்பதாலோ என்னாலே சொல்லப்பட்ட புன் சொல்லானது உன்னுடைய மனதில் இல்லாமல் போகட்டும்.

30) யதி³ விஸ் வாதி⁴கதா தே
யதி³நிக மா (ஆ) க³ம–புராண–யாதார்த்யம்!
யதி வாப⁴க் தேஷு த³யா
தத் இஹ ம ஹே ஸாஸ⁶பூர்ண காம:ஸ்யாம்!!

**விளக்கம்:**

மஹேசுவரனே! உனக்கு எல்லாவற்றிற்கும் மேலாகிய தன்மையுண்டு என்றால் வேதங்கள் ஆகமங்கள் புராணங்கள் இவை உண்மையானவை என்றால் அல்லது பக்தர்களிடத்தில் உனக்கு தயை உண்டு என்றால் அதனால் இங்கே அதிசீக்கிரத்திலே விருப்பங்கள் முழுமையும் நிறைவேறினவனாக ஆவேன்.

குறிப்பு: இந்த ஸ்தோதிரத்திலே 15,25,16 சுலோகங்களை ஸ்ரீ ஜகந்தாதரின் ஆர்யா ஸ்வதராஜ என்னும் ஸ்தோத்திரத்திலேயுள்ள 113,120,137 சுலோகங்களை ஒத்துள்ளன.

ஸ்ரீமத் பரம ஹம்ச பரிவ் ராஜகா சார்ய ஸ்ரீ பரமசிவேந்த்ரார்ய பூஜ்ய பாதர்களின் சிஷ்யர்களான ஸ்ரீ சதாசிவ ப்ரஹ்மேந்திரர்கள் அருளிய நூல்களுள் சிவ மானஸிக பூஜை முற்றிற்று.



உ

ஓம் ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மணேநம:

## ஸ்ரீசதா சிவ ப்ரஹ்மேந்திரர் அருளிய ஆத்ம வித்யா விலாஸம்

1) யத் பாத[3] பத்[3]ம மகரந்த[3]ஜுஷாம் நராணாம்
ஸம்ஸார கோ[4]ர புஜகா[3]ன்ன பவேத்ஸ்ம[4] பீதி :
ஸச்சித்கனம் ஸகல ஸௌக்ய லவாம்பு[3] ராஸிம்
ஸ்ரீ தக்ஷிணாபி[4] முக[2] மூர்த்திம் அஜம் பஜே ஹம்!!

**பொழிப்புரை:**

எவரது பாத கமலங்களின் மகரந்தத்தை நுகர்வதிலேயே களிப்புறும் மானிடர்களுக்கு ஸம்ஸாரம் எனும் கோரமான ஸர்ப்பத்தின் பயம் இருப்பதில்லையோ, ஸன்மாத்ரமாயும், சின்மாத்ரமாயும் அத்வயமாய் நீக்கமில்லா நிறைந்து அகண்டமாய் விளங்குபவரும், என்றும் பிறவாத சாச்வதரும், எல்லா உலக இன்பங்களையும் தனது திவலை மாத்திரமாகக் கொண்ட பரமானந்த ஸாகரனும் ஆன அந்த தென்திசை நோக்கி அமர்ந்துள்ள ஆதிகுரு மூர்த்தியை வணங்குகிறேன்.

2) ஏதாவதேவ[3]க[2]லுபும்பி[4]ரவாப்தும் அர்ஹம்
யச் சேதஸோ நிலயனம் நிஜதத்வ போதே!
ஆக்ரோஸநம் ஸ்ருதி ஸிராம்ஸியதர்தமேவ
குர்வந்தியேன ஹி பவேத் புருஷ:ஸ்[6]காப்தி :

**பொழிப்புரை:**

எந்த ஒரே பொருளை வேதங்களின் மகுடங்களாகிய உபநிஷத்துக்கள் பறை சாற்றுகின்றனவோ, எதனால் மட்டுமே மானுடன் ஆனந்த ஸாகரனாய் விளங்குவானோ, எந்த உண்மை தத்வ ஞானத்தில் மனது லயிக்க வேண்டுமோ அத்தகைய ப்ருஹ்மமே அல்லவா அடையத்தக்கது.

3) மாதேவ புத்ரமனு போதயதி ஸ்ருதிர்ஹி
லோகம் ஸமஸ்தமபி யோஜயிதும் ஸுகேன!
தஸ்மாச் ச்ரு தேரபிஹி தார்தமதந்த்ரிதேன
சித்தேன ஸாதயிது மத்ர ஜனா யதத்வம்!!

**பொழிப்புரை:**

தாய் தனது மகனுக்கு அன்புடன் கற்பிப்பது போல், வேதம் (உப நிஷத்து) உலகம் முழுவதையும் தனது ஸ்வரூப ஆனந்தத்துடன் இணைப்பதற்காகவே (சிஷ்யனின் தகுதியை அனுசரித்து) மீண்டும் மீண்டும் உபதேசிக்கிறது. ஆகவே ச்ருதியில் கூறப்பட்டுள்ள இப்பொருளை சோம்பலற்ற (விழிப்புடனுள்ள) ஸூக்ஷ்மமும், ஒரு முனைத்ததுமான மன

தினால் (ஸாக்ஷாத்கரிக்கும் ஸாதனையில்) ஜனங்கள் முயற்சி செய்ய வேண்டும்.

4) ஆதாவிதம் ஸகலமேவ ஜகத்ஸ தாஸீத்
கும்பாதிவத் ததனு ஸக்தியுதாத் பரஸ்மாத்!
ஆகாஸ வாயு தஹனாம்பு புவோ பபூவுர்
வாத ப்ரஸக்த ஸலிலாதிவ வீசிபுர :

**பொழிப்புரை:**

ஸ்ருஷ்டிக்கு முன்னர் இந்த எல்லா உலகும் (நிர்விகல்பமான) அந்த ஸத்தாகவே இருந்தது. பின்பு (மாயா) சக்தியுடன் கூடிய அந்த பரப்ரஹ்மத்திலிருந்து காற்று வீசுவதனால் ஜலத்தில் அலைகள் தோன்றுவதே போல் குடம் முதலியவை (குயவனால் விளையப்படுவதே) போல் ஆகாயம், வாயு, அக்னி, நீர், நிலம் என்றவை (தன் மாத்திரைகள் எனப்படும் ஸுக்ஷ்ம மஹாபூதங்கள்) உண்டாயின.

5) ஸூக்ஷ்மாக்ய பூதகத ஸத்வரஜஸ் தமோபிர்
லிங்கம் ஸரீரமுத பூதத ஈஸ்வரேச்சா!
பஞ்சீசகார வியதாதிக பூத ஸூக்ஷ்மாண்
யண்டம் ப்ரபூதத இதம் ஸஹ ஜீவ போக்யை:

**பொழிப்புரை:**

ஸூக்ஷ்ம மெனப்படும் பஞ்ச மஹா பூதங்களின் ஸத்வ, ரஜஸ், தமோ, குணங்களினுல் ஸூக்ஷ்ம (லிங்க) சரீரம் உண்டாயிற்று. ஈச்வரனது இச்சை, ஆகாயம் முதலிய ஸூக்ஷ்ம பூதங்களை பஞ்சீகரணம் செய்யவே ஜீவர்களின் போக்ய பதார்த்தங்கள் அவைகளின் ஆதாரமான “இது” எனப்படும் ஜகத்தும் (ப்ரஹ்மாண்டம்) உண்டாயிற்று.

6) ஸ்ருஷ்ட்வா ஜகத்ஸ கலமேவ ம்அஸேஷகர்தா
தத் ப்ரா விஸத் புனருபாகத ஜீவபாவ:!
விஸ்ம்ருத்ய ஸத்யஸுக போத மயஸ்வரூபம்
ப்ராந்த்யா ப்ரமத்யனி ஸமஸ்த விவேகலேஸ:!!

**பொழிப்புரை:**

எல்லாவற்றிற்கும் கர்த்தாவாகிய ஈச்வரன் எல்லா உலகையும் படைத்து அதனுள் பிரவேசித்தார். (நுழைவது போல் ஊடுருவி நிறைவாய் நின்றார்) (முக்குண வடிவமான ப்ரக்ருதி என்னும் அவித்யைக்கு வசப்பட்டதும், ப்ரஹ்மத்தின் ப்ரதிபிம்பத்தை கொண்டதுமான) ஜீவ பாவத்தையடைந்து ஸத்ய, ஆனந்த, சின்மயமான தனது ஸ்வரூபத்தை மதிமயக்கத்தில் நன்கு மறந்து, விவேகத்தின் சிறு லேசமுமற்றவனாய் இடை விடாமல் அலைகின்றான்.

7) இத்தம் ப்ரமாத வஸத: பரிமுஹ்யமானோ
தே ஹாத் மபுத்தி பரிகல்பித கர்மபந்த:!
ஸ்வர்காதி போக கமனா கமனாதி கின்னோ
லூதாவதேஷ பவமப்யகமச் சிதாத்மா!!

**பொழிப்புரை:**

இவ்வாறு இந்த சிதாத்மா ப்ரமாதத்திற்கு (கவனக்குறைவால் ஏற்படும் பிழைக்கு) வசமானவனாய், நன்கு மோஹிக்கப்பட்டு (தானே கூட்டை உண்டாக்கி அதில் சிறையுறும்) பட்டுப்பூச்சி போல், தேஹமே ஆத்மா என்ற (தவறான) புத்தியினால், செவ்வனே கற்பிக்கப்பட்ட கர்மத்தளைகளைக் கொண்டவனாய், ஸ்வர்க்காதி லோகங்களுக்குப் (போகத்திற்கு) போவதும் (மீண்டும் இவ்வுலகத்திற்கு திரும்பி) வருவதுமாய், துயறுற்று (ஜனன மரணமெனும்) ஸம்ஸாரத்தையடைந்தது.

8) மாயா யுதஸ்த்வகமதீ ஸ்வரதாம் சிதாத்மா
சாவித்யயா யுகபவத்ப்ருத ஜீவபாவ :
மாயா பவேத்விமல ஸத்வகுண ப்ரதானா
ப்ரோக்தா மலாபிஹி தஸத்வகுணாத்வ வித்யா!!

**பொழிப்புரை:**

விமலமான (சுத்தமான) (ரஜஸ்தமோ குணங்களால் மலினப்படாத) ஸத்வ குணப்ரதானமான முக்குண ப்ரக்ருதியே மாயையாகும். மலத்தினால் மூடப்பட்ட ஸத்வ குணத்துடன் கூடிய (ரஜஸ்தமோ குணங்கள் மேலிட்டு ஸத்வம் அடங்கியுள்ள) ப்ரக்ருதியே அவித்யையெனப்படும். சிதாத்மா (தனது ஸ்வாதீனத்தில் உள்ள) மாயையுடன் கூடியவராய் ஈஸ்வரத் தன்மையை அடைந்தது. அவித்யையுடன் கூடி (அதன் வசப்பட்டதாய்) ஜீவபாவத்தைப் பெற்றவனாகி விட்டது.

9) ஏகோ அப்யனேக இவாதி ஸரீர பேதாத்
ஆத்மா கடாதிகத பேதவஸாத் வியத்வத்!
தேஹேந்த்ரியாதிஷு சலத்ஸு நிஜப்ரகாஸாத்
பூர்ணோ பி நிஸ் சலதரோபி விகாரவத்வத்!!

**பொழிப்புரை:**

ஒரே ஆகாசமானது குடங்கள் முதலியவற்றின் பேதம் காரணமாக, வெவ்வேறாகத் தோன்றுவது போல், ஆத்மா ஒன்றாயிருப்பினும், சரீர பேதத்தினால் பல போல் விளங்குகிறது. ஆத்மா ஸ்வயம் ப்ரகாசமாயிருப்பதால் பூர்ணனாகயிருந்தும், சிறிதும் அசைவற்ற தன்மையுடையதாய் இருப்பினும், தேஹேந்திரியங்கள் மாறுதல் அடையும் போது, தானும் விகாரத்திற்குட்பட்டதுபோல் தோன்றுகிறது.

10) ஏவம் பவார்ணவ நிமஜ்ஜன து:க்கிதேஷு
லோகேஷு பூர்வஜனி ஸஞ்சித புண்ய புஞ்ஜை:!
கஸ்சித் விஸுத்த மதிரேத்ய குரும் க்ரு பாப்திம்
ப்ராஹ ப்ரணம்ய பவஸாகர லங்கனேச்சு:!!

**பொழிப்புரை:**

இவ்வாறு பவ (ஜனனமரண)மெனும் ஸமுத்திரத்தில் மூழ்கி துக்கத்தையடைந்த ஜனங்களில், பூர்வ ஜன்மங்களில் ஈட்டிய, புண்ணியக் குவியல்களின் காரணமாய் சித்த சுத்தியையடைந்த யாரோ ஒருவன் ஸம்ஸாரஸாகரத்தைத் தாண்ட விரும்பியவனாய், கருணைக்கடலாகிய குருவை நமஸ்கரித்துக் கூறினான்.

11) ஸம்ஸார கோர ஜலதௌ பகவன்ன பாரே
தாபத்ரயௌக தஹனே ஸஹஜாரிநக்ரே!
மோஹாம்பஸி ப்ரசலதுத்பவ ம்ருத்யு பங்கே
வீசஷ்யாந்தரஸ்மி பதிதம் ஜகதத்ய பீத:!!

**பொழிப்புரை:**

பகவானே! கடக்க முடியாததும், உடன் பிறந்த சத்ருவாகிய (அக்ஞானமும்) முதலைகளையுடையதும், தாபத்ரயமெனும் கூட்டமாகிய வாடவாக்னியினால் தஹிப்பதும், மோஹமெனும் நீரில் பிறப்பு இறப்பு என மாறி மாறி எழுந்து அடங்கும் அலைகளுடன் கூடியதுமான ஸம்ஸாரமெனும் கோரமான கடலினுள் விழுந்து உழலும் இந்த உலகத்தைக் கண்டு நான் இப்பொழுது பயந்துள்ளேன்.

12) மாது: ஸ்திதஸ்ய ஜடரே வசஸாம் சதூ³ரம்
துக்கம் புனர்ஜனன கால பவம் துரூஹ்யம்!
பால்யே பி துக்கம விஷஹ்யம வாரணீய
மாலோச்ய பீதிரதுனா மஹதீ மமோத்தா!!

**பொழிப்புரை:**

தாயாரின் வயிற்றில் இருந்து கொண்டு அனுபவித்த துக்கம் சொல்லி முடியாது. மீண்டும் பிறக்கும் போது ஏற்படும் ஸஹிக்க முடியாத கஷ்டமும், மேலும் பால்யத்திலும் பொறுக்க முடியாததும், தவிர்க்க முடியாததுமான துன்பத்தையும் நன்கு ஆலோசித்து பார்த்து இப்பொழுது எனக்கு அதிகமான பயம் ஏற்பட்டுள்ளது.

13) தாருண்ய மேத்ய குலயௌவன ரூபஸம்பத்
வித்யாத்ம கர்வ மிஹிதாத்ம ஹிதாபிலாஷ :
விண்மூத்ர மாம்ஸ ருதிராஸ்திமயே ஸரீரே
நார்யா ருசிம் ஸமுபயாதி ஜனோ விசித்ரம்!!

**பொழிப்புரை:**

வாலிபத்தை அடைந்தபோது குலம், யௌவனம், ரூபம் (அழகு), செல்வம்),வித்தை, ஆத்ம கர்வம் (அஹங்காரம்) இவற்றால் ஆத்மாவிற்கு உகந்த நாட்டம் மறைக்கப்பட்டு மலம், மூத்ரம், மாம்ஸம், இரத்தம், எலும்பு நிறைந்த ஸ்திரீ சரீரத்தில் ருசியை இந்த மனிதன் அந்தோ! நன்கு அடைகிறான்.

14) ஸர்வாபதாம் நிலயமேத்ய வயோதிகத்வம்
ஜந்து: ஸுகம் நலபதே ஹ்யயி கிஞ்சிதத்ர!
பும்ஸாமிஹாஸ்தி ந பயம் கலும் ருத்யுதோன் யத்
திக்க்ருத்ய ஸம்ஸ்ருதிமிமாம் அபவம் விரக்த :

**பொழிப்புரை:**

பிறகு வயது, அதிகரிக்கவே, எல்லா ஆபத்துகளின் இருப்பிடமாய் உடல் ஆகி, இந்த ஜந்து இங்கு சிறிதேனும் சுகத்தை அடைவதில்லை. மனிதர்களுக்கு மரணத்தைக் காட்டிலும் வேறு பயம் இங்கு இல்லை. இந்த ஸம்ஸாரத்தை வேண்டாம் என்று வெறுத்து வைராக்யம் உடையவனாகியுள்ளேன்.

15) ஸ்வாமின் கதம் மம பவார்ணவ லங்கனம் ஸ்யாத்
ஆயாஸலே ஸரஹிதம் வத தத்ர ஹேதும்!
ஸ்ருத்வாது ஸிஷ்ய வசனம் ரமணீய மித்தம்
ப்ரத்யுத் தரம் குரு ரதாத் க்ருதமந்த ஹாஸ:

**பொழிப்புரை:**

ஸ்வாமி! இந்த பவஸாகரத்தைத் தாண்டுவது எங்ஙனம்? அதற்கு சிறிதும் சிரமமில்லாத வழியை (ஹேதுவை) எனக்கு கூறுங்கள். சிஷ்யனின் இத்தகைய இனிமையான சொல்லைக் கேட்டு, குரு புன்னகை பூத்து பதில் அளித்தார்.

16) தேஹேந்த்ரியாஸுஹ்ருத யாதிக சைத்ய வர்காத்
ப்ரத்யக்சி தேர்வி பஜனம் பவவாரிரா ஸே:!!
ஸந்தாரனே ப்லவ இதி ஸ்ருதி டிண்டி மோயம்
தஸ்மாத் விசாரய ஜடா ஜடயோ: ஸ்வரூபம்!!

**பொழிப்புரை:**

தேஹம், இந்திரியங்கள், ப்ராணன், மனம் முதலிய ஜட வர்க்கத்திலிருந்து உள்ளேயிருக்கும் ஆத்மாவை பிரித்தறிவதே பவஸாகரத்தை நன்கு தாண்டுவதற்கு படகு ஆகும் என்பதே

உபநிஷத்துக்களின் முழக்கமாகும். ஆகவே ஜடம்,சித் இவைகளின் ஸ்வரூபத்தை விசாரிப்பாயாக.

17) ப்ரத்யக்சி திர்வபுரிதம் ந பவேஜ் ஜடத்வாத்
குட்யாதி வஜ்ஜட தயாப்யஸவோ நசித்ஸ் யு:!
நாபீந்த்ரியாணி கரணம் குத ஏவ சித்ஸ்யாத்
குத்தாலகாதிவதிதி ப்ரவிசாரயத்வம்:

## பொழிப்புரை:

இந்த (ஸ்தூல) சரீரம் சுவரைப் போன்று ஜடமாயிருப்பதால் ப்ரத்யகாத்மாவாகாது. ப்ராணன்களும் ஜடத்தன்மையினால் சித்தாவது அன்று. இந்திரியங்களும் மண்வெட்டி போன்று கருவிகள்தானே. அவை சித்தாக எப்படியிருக்கும்?இவ்வாறு நீ செவ்வனே விசாரிக்க வேண்டும்.

18) த்ருஸ்யத்வதோ ந மனஸஸ்ச பவேச் சிதித்வம்
நாஹம்க்ருதிஸ்ச பரிணாமவதீ சிதி: ஸ்யாத்!
புத்தேர சித்வமபி ஜன்ம விநாசவத் வாச்
சித்தம் சத்ருஸ்யமசிதித் யனுசிந்தய த்வம்!!

## பொழிப்புரை:

பார்க்கப்படும் பொருளாகயிருக்கும் மனதிற்கும் சித்தாயிருக்கும் தன்மை இல்லை. அஹங்காரமும், மாறுதலுக்கு உட்படுவதால் சித் ஆகாது. புத்திக்கும் தோன்றி அழியும் தன்மையுடையதால் அசித் அதாவது ஜடமேயாம். சித்தமும் த்ருச்யம். (பார்க்கப்படும் பொருள்) ஆகவே ஜடம் என்று மீண்டும் விசாரம் செய்வாயாக.

19) புத்த்வா ஸமஸ்தமபி த்ருஸ்யம சித்ஸ் வரூபம்
ப்ரத்யக்சிதிம் ச நிஜரூபதயா விதித்வா!
தேஹேந்த்ரியாத்யகில ஸாக்ஷ்யஹமித்ய ஜஸ்ரம்
ஸஞ்சிந்தய வ்யபகதாகில ஸம் ஸய:ஸன்!!

## பொழிப்புரை:

பார்க்கப்படும் பொருள் எல்லாம் அசித் (ஜடம்) வடிவமே என்று உணர்ந்து உள்ளே உறையும் பேரறிவை தனது ஸ்வரூபமென அறிந்து தேஹம், இந்திரியங்கள் முதலியவற்றிற்கெல்லாம் நான் (அவை களிலிருந்து வேறுபட்ட) ஸாக்ஷி என்று உறுதியாய் எல்லா ஸந்தேஹங்களும் நீங்கியவனாய் இடைவிடாமல் நன்கு சிந்திப்பாயாக.

20) தேஹாதிகம் ஜகதஸஜ்ஜட துக்க ரூபம்
மய்யத் விதீய நிஜ போதஸதாதிரூபே!
ஸம்த்ருஸ்யதே ப்ரமவஸாத் ககனே நிரம் ஸே
கந்தர்வ பத்தனமி வேத்யனு பாவய த்வம்!!

**பொழிப்புரை:**

தேஹம் முதலியவை முதற்கொண்டு ஜகத், அஸத், அன்ருத ஜட, துக்க ரூபமேயாம். அத்விதீயமான (இரண்டற்ற, வேறற்ற) ஸத், சித், ஆனந்த ஸ்வரூவமாகிய என்னிடத்தில் ப்ரமையின் (மதிமயக்கத்தின்) காரணமாய், நிரம்சமான ஆகாசத்தில் கந்தர்வ நகரம் தோன்றுவது போலவேதான் நன்கு காணப்படுகிறது என்று மீண்டும் மீண்டும் பாவனை (அனுஸந்தானம்) செய்வாயாக.

21) யா சித்ப்ரபா த்வமிதி மேயவி பாஸ யித்ரீ
யத் ஸங்க்ர மாத் கடபடாத்யவபா ஸிகாதீ:!
ஆப்ரஹ்மகீட மஹமித்யவ பாஸமானா
யா சைவ ஸம்விதிதி சிந்தய ஸந்ததம் த்வம்!!

**பொழிப்புரை:**

எந்த சைத்னயத்தின் பிரகாசம் "நீ" என்று அறியப்படும் பொருளை விளங்குமாறு செய்கிறதோ: புத்தி எதனுடைய சேர்க்கையினால் குடம், ஆடை முதலியவற்றை விளக்கி அறிகிறதோ, எது நான்முக ப்ரம்மா முதல் எறும்பு வரை (எல்லாவற்றிலும்) "நான்" என்று ஸ்புரிக்கிறதோ (ப்ரகாசிக்கிறதோ) அந்த ஸம் வித், பேரறிவேதான் (நான்) என்று ஸந்ததம் (எப்பொழுதும்) சிந்தனை செய்வாயாக.

22) ஜாக்ரன் முகத்ரிவிததாம ஸுஸாக்ஷிணீயா
ஜாக்ரன் முகத்ரி விததாம விலக்ஷணாயா!
ஸ்வப் னாத்யனு ஸ்ம்ருதி பலாத் ஸததை கரூபா
சைவாஹமஸ்மி சிதிரித்ய வதாரய த்வம்!!

**பொழிப்புரை:**

எது நனவு முதல் மூன்று வேறு வேறு நிலைகளுக்கு (மாறுதலையடையும் அவற்றின் தோற்றத்திற்கு) மாறாத ஸாக்ஷியோ நனவு முதல் மூன்று நனவு, கனவு, உறக்கம் நிலைகளிலிருந்தும் (அவற்றின் தோற்றத்திற்கு அதிஷ்டானமாக, அடிப்படையாக) வேறுப்பட்டதோ; நனவு முதலியவற்றை தொடர்ந்து நினைவு கூறும் தன்மையுடையதால் எப்பொழுதும் ஒரே வடிவாயுள்ளதோ; அந்த சைதன்யமாகத்தான் நான் இருக்கிறேன் என்று நீ உறுதி கொள்வாயாக.

23) நோதேதி நாஸ்தம் உபயாதி நவ்ருத்திமேதி
நைவோப யாதி பரிணாம மபக்ஷயம்வா!
ஸ்வாத் யஸ்த ஸர்வ ஜனனாதி விகார ஸாக்ஷிண்
யேஷா ஹிஸம் விதிதி சிந்தய ஸந்ததம் த்வம்!!

**பொழிப்புரை:**

இந்த ஸம்வித் (பேரறிவு) உதிப்பதில்லை. அஸ்தமனம் அடைவதில்லை. வளர்ச்சி பெறுவதில்லை. மாறுதலையோ அல்லது தேய்வையோ யெய்வதில்லை. தன்னிடத்தில் (அக்ஞானத்தினால்) அத்யாஸம் செய்யப்பட்ட ஏற்றப்பட்டுள்ள பிறப்பு முதலிய மாறுதல்களுக்கு (என்றும் மாறாது) ஸாக்ஷியாக இதே உள்ளது என்று எப்பொழுதும் நீ சிந்திப்பாயாக.

24) மச்சேஷதாம் ஸமவலம்ப்ய ஸுதாதி ஸர்வம்
யேன ப்ரியம் பவதி தேன ஸுகஸ்வரூப :
தேஹேந்த்ரியாதி விஷய ப்ரலயைக ஸாக்ஷி
யஸ்மாத்தத: ஸதிதிமே நிஜரூபமாஸ் ஸ்வ!!

**பொழிப்புரை:**

எதனால் என்னுடைய ஆனந்தத்தை நன்கு பற்றியிருப்பதால் புதல்வன் முதலான எல்லாமும் எனது ப்ரீதிக்கு விஷயமாகின்றதோ அதனால் (ஆத்மா மேலான ப்ரீதிக்கு விஷயமாயிருப்பதனால்) நான் நிரதிசயமான ஆனந்த வடிவினன்: தேஹம் இந்திரியங்கள் முதலியன விஷயமாகிய ஜகத் இவற்றின் பிரளயத்திற்கும் (அவை ஒடுங்கி நிற்கும் தினசரி பிரளயமான உறக்க நிலைக்கும் மஹா பிரளயத்திற்கும்) ஸாக்ஷியாக நான் எப்பொழுதும் இருப்பதால் நான் ஸத் என்று தனது ஸ்வரூபத்தையறிந்து கொள்வாயாக.

25) ஆதௌ த்வமேவ ஸதபூரவி ஸேஷ ரூபஸ்
த்வத் தோதிதம் ஜகதிதம் ஸவிஸேஷ ஜாதம்!
த்வய்யேவ திஷ்ட தி ததா த்வயி சாவ ஸானே
ஸம்லீயதே ஜலநிதாவிவ புத்புதாதி!!

**பொழிப்புரை:**

முதலில் நீ ஸத்மாத்திரமாகவே வேற்றுமையற்றதாய் எவ்வித விசேஷ ரூபமும் அன்றி இருந்தாய். உன்னிடமிருந்து தோன்றியதே எல்லா விசேஷங்களுக்கும் கூடியதான இந்த ஜகத் சமுத்திரத்தில் நீர்க்குமிழிகள் முதலியன (தோன்றி விளங்கி மறைவது) போல, உன்னிடமே இது (உலகம்) நிலை பெற்றுள்ளது. அவ்வாறே முடிவில் நன்கு லயமுமடைகிறது.

26) வ்யாபித்வ ஹேது பலதோ நதிஸாஸ்தி மேந்தோ
நித்யத்வஹேது பலதஸ்ச நகாலதோந்த:!
ஸார்வாத்ம்ய ஹேது பலதஸ்ச நவஸ்துதோந்த:
தஸ்மாதனந்தமிதி மே நிஜரூபமா ஸ்ஸ்வ!!

**பொழிப்புரை:**

நீக்கமற நிறைந்திருக்கும் (தன்மையின்) காரணத்தினால் சிறப்புடைய எனக்கு திசை வரையறுப்பதில்லை. நித்யமாக இருப்பதனால் மாட்சியுடைய

எனக்கு காலத்தினால் முடிவு கிடையாது. எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக உள்ளதால் மேன்மையுள்ள எனக்கு வேறு வஸ்துவினால் எல்லை இல்லை. ஆகையால் என்னுடைய நிஜவடிவம் அனந்தம், எல்லையற்றது என்று நிலையுறுவாயாக.

27) ஏவம் நிரந்தர ஸமாதி வஸான்னிராதிர்
ஞானாக்னிதக்த ஸஹகாரண ஜன்மபீஜ:!
ஆவிர்பவந் நிஜ ஸுகானுபவைக த்ருப்தோ
ப்ரஹ்மைவ நூனமிஹ ஸம்பவஸி த்ருவம் த்வம்!!

**பொழிப்புரை:**

இவ்வாறு இடைவிடா ஸமாதி வசத்தினால் பூர்வ ஜன்ம வினைகளின் காரணமாக ஏற்படும் மனத்துயராகிய ஆதி எனப்படும் தடை நீக்கப்பட்டவனாய் மறுபிறப்பிற்கு வித்தாயுள்ள கர்மமும் அதனுடைய காரணமான அவித்யையும் ஞானமெனும் அக்னியால் பொசுக்கப்படவே, ஆவிர்பவிக்கும் நிஜானந்த அனுபவத்திலேயே பரம திருப்தியடைந்தவனாய் இங்கேயே நீ ப்ரஹ்மமாகவே திகழ்வாய் என்பது திண்ணம்.

28) இத்தம் கிரா விமலயா பரஸௌக்ய தாத்ர்யா
வாசா: குரோர் விமதிதாகில ஸம்ஸயௌக:!
சிஷ்ய: ஸமாதி பரிஸீலன தீக்ஷ்ண திவ்ய
ஞானாஸி கண்டித பவாக்ய விஷத்ரு மோ பூத்!!

**பொழிப்புரை:**

இவ்விதமாய் பரிசுத்தமான வார்த்தைகளால் ஆனதும், மேலான சௌக்கியத்தையளிக்கக் கூடிய குருவின் வாக்கினால் எல்லா ஸம்ஸயக் கூட்டங்களும் போக்கடிக்கப்பட்ட சிஷ்யன் ஸமாதி, விசாரம் இவைகளால் நன்றாக தீட்டப்பட்ட திவ்யமான ஞானமெனும் வாளினால் ஸம்ஸாரமெனப்படும் விஷ விருக்ஷத்தை வெட்டியவனாக ஆனான்.

29) ஸ்வானந்தமப்ரதி ஹதம் பரிபுஜ்ய ஹர்ஷா
தஸ்ரு ப்ரபூர்ண நயன: புலகாங்கிதாங்க:!
சிஷ்ய: ஸகத்கத முவாச குரும் க்ருணாப்திம்
நத்வா ததங்க்ரியுகலம் வினயோ பயுக்த:

**பொழிப்புரை:**

தங்குதடையற்ற (நிரர்கலமான) ஸ்வரூப ஆனந்த்தை நன்கு அனுபவித்து ஆனந்தத்தால் கண்ணீர் நிறைந்த நயனங்களையும், புளகாங்கிதம் அடைந்த அங்கங்களையும் உடையவனாய், சிஷ்யன் உணர்ச்சி வசப்பட்டு; தழுதழுத்த குரலில் கருணைக்கடலான குருவினுடைய இருபாதங்களையும் வணங்கி வினயத்தோடு கூறலானான்.

30) ஸ்வாமின் பவத்வசன திவ்ய ஸுதாபி ஷிக்த
ஸ்வானந்த மஞ்ஜு நகரே விஹராமி நித்யே!
அஞ்ஞான துர்ஹ்ருத மதீவ ஸிதேன ஸம்யக்
ஞானாஸினா பரிவிலூய ஸஹானுஜாதம்!!

**பொழிப்புரை:**

ஸ்வாமி! (அனாதிகாலமாய்) கூடவே வந்துள்ள அக்ஞானமெனும் எதிரியை ஸம்யக்ஞானம் எனப்படும் மிகவும் கூர்மையான வாளினால் நன்கு வெட்டி தங்களது வாக்கு எனும் திவ்யமான அம்ருதத்தினால் அபிஷேகம் செய்யப்பட்டவனாகி, அழிவற்ற ஸ்வரூபானந்தம் என்ற கவர்ச்சிகரமான நகரத்தில் களித்துக்கொண்டு இருக்கிறேன்.

31) கச்சாமி குத்ர கிமஹம் கரவாணி கிம்வா
க்ருஹ்ணாமி கிம் பரிஜஹாமி மயிப்ர பூர்ணே!
நிர்வ்யாஜ ஸௌக்ய ஜலதௌ பரித்ருஸ்ய மானம்
பேனாதிகம் ஜகதிதி ஸ்திர நிஸ்சயோ மே!!

**பொழிப்புரை:**

நான் எங்கு இனி செல்ல வேண்டும்? என்ன செய்ய வேண்டும்? எதைக்கொள்ள வேண்டும். எதைத் தள்ள வேண்டும்? கடலில் நுரை முதலியவை (தோன்றி மறையும் தோற்றமாத்திரமாக) காணப்படுவது போலவே பரிபூர்ணமான ஸஹஜானந்த ஸாகரனாகிய என்னிடத்தில் இந்த ஜகத் தோன்றுகிறது என்பது என்னுடைய ஸ்திரமான முடிவு.

32) மாயாபிதோ ஜலதரோ ஜகதாக்ய மம்பு
வர்ஷத்வனேன மம சித்வ புஷ: க்ஷதி: கா!
லாபோபி வாக இதி ஸந்தத மாத்ம ரூபம்
ஸம்சிந்தயயன்ஸ் திரமதிர் விஹராமி நித்யே!!

**பொழிப்புரை:**

மாயை எனப்படும் மேகம் ஜகத் என்ற மழையை வர்ஷிக்கட்டும். அதனால் சித் வடிவமான எனக்கு என்ன நஷ்டம்? லாபம்தான் என்ன? என்று இடையறாது ஆத்ம ஸ்வரூபத்தையே நன்கு சிந்தித்துக்கொண்டு நித்யமான அவ்வஸ்துவில் ஸ்திரமான ப்ரக்ஞையுடன் களிக்கிறேன்.

33) வாக்காயமானஸபவம் ஸகலம் ஹி கர்ம
ப்ரோக்தம் ஸுபாஸு பமயம் நததோ ஸ்தி பின்னம்!
வாகாதி ஸாக்ஷினி கதம் மயி நிர்மலே ஸ்யாத்
கர்மத் வயம் தது திதம் ஜனனா திகம் வா!!

**பொழிப்புரை:**

மனம், வாக்கு, காயம் இவற்றால் இயற்றப்படுவதும் சுபம், அசுபம் வாய்ந்தது என்று கூறப்படும் எல்லா கர்மமும் அந்த ஸ்வரூபத்திற்கு வேறானது இல்லை. வாக்கு முதலியவைகளுக்கு ஸாக்ஷியாகவும் நிர்மலமாகவும் (மாசற்றதாகவும்) உள்ள என்னிடத்தில் புண்ணிய பாபங்களாகிய இருவினைகள் எப்படி இருக்கும்? அக்கர்மங்களின் பலனாய் ஏற்படும் பிறப்பு முதலியவைகளும் எப்படி எனக்கு இருக்கும்?.

34) வ்யாவ்ருத்த ரூபமிதமேவ ஜகத்வி பின்னம்
ஞானம் த்வபின்ன மனுவ் ருத்ததயா கிலேஷு!
ஞானம் சபின்னமிதி சேஜ்ஜட தாதி தோஷ
ப்ராதிர்பவேச் ச்ருதி ஸிராம்ஸி நதம் ஸஹந்தே

**பொழிப்புரை:**

மாறிக்கொண்டிருக்கும் பல்வேறு ரூபங்களுடன் கூடிய இந்த ஜகத் வெவ்வேறு என பிரிவுக்குட்பட்டதாகவே இருக்கும். சுத்த சைதன்யமோ எல்லாவற்றிலும் அகண்டமாய் தொடர்ந்து ஊடுருவி இருக்கும் தன்மையுடையதனால் பிரிவுக்குட்பட்டதல்ல. அந்த பேரறிவு பேதமுள்ளது என்றோமானால் அதற்கு ஜடத்வம் முதலிய தோஷங்கள் ஏற்பட்டு விடும். அதை வேதங்களின் மகுடங்களாகிய உபநிஷத்துக்கள் ஸஹித்துக் கொள்ளாது (வேதாந்தத்திற்கு புறம்பாகி விடும்).

35) நைவேந்த்ரியாணி விஷயேஷு நியோஜயாமி
ப்ராக்வாஸனாவஸத ஏவஹி தானி யாந்தி
ஸ்வான் கோசரான்ப்ரதி மமாஸ்தி நஸாக்ஷிதாபி
ஸா ஸாக்ஷ்யபேத கலிதா கலு ஸோப்யஸத்ய:!!

**பொழிப்புரை:**

நான் இந்திரியங்களை அவ்வவற்றின் விஷயங்களில் சேர்ப்பதில்லை. முன்ஜன்ம வாஸனையின் காரணமாகவே அதை தத்தம் விஷயங்களை யடைகின்றன. இந்திரியங்களுக்கு விஷயமாவதைப் பற்றி எனக்கு ஸாக்ஷியாயிருக்கும் தன்மையும் கிடையாது. ஏனெனில் ஸாக்ஷீத்வமும் ஸாக்ஷிக்கு விஷயம் என்று பேதத்தினால் ஏற்படுகிறதல்லவா? அதுவும் ஸத்யமல்ல.

36) பேதோபி ஸாக்ஷ்யகத ஏவ ந ஸாக்ஷிணோ மே
பேதஸ்ய ஸாக்ஷிணி கதம் ப்ரப வேத் ஸ பேத:
பேதோ ந ஸுப்திஸமயே னு பலம் பனாச்ச
ஸன்னாஸ்திதாந இஹ த்ருஷ்ட தயா ந வாச்யா!!

**பொழிப்புரை:**

பேதமும் ஸாக்ஷியின் விஷயங்களுக்குள் தான் உள்ளதே தவிர ஸாக்ஷியாகிய என்னிடத்தில் இல்லை. பேதத்திற்கு ஸாக்ஷியினிடத்தில் அந்த பேதம் எப்படியிருக்கும்? ஏனெனில் உறக்கத்தில் (ஸுஷுப்தியில்) பேதம் அனுபவிக்கப்படுவதில்லை. (பேதம் இருப்பதற்கும் இல்லாததற்கும் நான் ஸாக்ஷீ ஸத்வஸ்துவிற்கு இல்லாமல் போவது என்பது கிடையாது. பேதம் இப்பொழுது காணப்படும் தன்மையுடையதாயிருப்பதால் அது எப்பொழுதும் இருப்பதாகக் கூற முடியாது.

37) விஸ்வம் ஸதேததிதி கார்யகரத்வ ஹேதோ:
யத்யஸ்ய ஸத்வமிஹ ஸாதயிதும் யதேதா:!
தர்ஹ்யத்ர ரஜ்ஜு புஜகாத்யபி ஸத்பலாத்ஸ்யாத்
ஸத்யத் வஹேதுரித மாஹர பாதி தத்வம்!!

**பொழிப்புரை:**

இந்த ஜகத் ஒரு கார்யத்தைச் செய்வதற்கு ஹேதுவாக (காரணமாக) இருக்கிறது என்பதனால், இது உண்மையென்று இதனுடைய உண்மையான இருப்பை ஸாதிக்க (நிரூபிக்க) முயன்றால் அப்பொழுது அங்கு கயிற்றில் தோன்றும் பாம்பு முதலியவைகளும் கூட ஒருகாலத்தில் இருக்கிறது (தோன்றுகிறது) என்ற காரணத்தால் மெய்ப்பொருளாகி விடும். முக்காலத்திலும் பாதம் இல்லாமல் இருப்பதே மெய்ப்பொருளா யிருப்பதற்கு ஹேது என்று கருதப்படுகிறது.

38) கீத்ருக்விதம் ஜகதயே வத ஸத்வசித்த்யா
த்யாகார ஹீனமிதி ப்ருஷ்ட வதேஸ்தி மஹ்யம்!
ப்ரத்யுத்தரம் கிமிதி தே தவ மௌனமேவ
ப்ரத்யுத்தரம் பவதி மாம் ப்ரதி கச்ச ஜால்ம!!

**பொழிப்புரை:**

ஐயனே! ஸத் சித் முதலிய வடிவமில்லாத ஜகத் எப்படி பட்டதாக இருக்கும். சொல்லுங்கள் என்று கேட்கும் எனக்கு தங்களது பதில் என்ன? தங்களுடைய மௌனம் தான் எனக்கு அளிக்கும் பதிலாக இருக்கும். போடா மடையா என்று உரைப்பது போல.

39) ஞானாக்னி தக்தமபி பாதி ஜகத் விசித்ரம்
யச்ச த்வனிப்ரமவத: ஸவிஸேஷ போதாத்!
தஸ்மின் ப்ரமே விமதிதே பி ததைவ பாதி
திக் வத்யதோ மமசதத்வததோ நஸத்தத்!!

**பொழிப்புரை:**

ஞானாக்னியால் தஹிக்கப்பட்டு விட்டாலும்,இந்த ஆச்சரியமான ஜகத் விளங்குகிறது. எதிரொலியினால் பிரமித்து போகிறவனுக்கு விசேஷமான அறிவுரையினால் அவனிடம் அந்த மதிமயக்கம் நன்கு தெளிந்து விட்ட போதிலும் அந்த பிரதித்வனி அவ்வாறே அத்திசையில் (ஒலித்து) விளங்குகிறது. அதைப்போலவே இந்த ஜகத் எனக்கு தோன்றினாலும் அது ஸத் ஆகாது.

40) பூமிம் ஜலே ததபி தேஜஸி தச்ச வாயௌ
தம் வ்யோம்னி தத்த்ரி குணயா ஸஹமய்யனந்தே!
பூர்ணே விலாப்ய பரிஸிஷ்ட மகண்ட ஸம்வித்
ஸ்வானந்தரூப மனுபூய ரமே ஹமத்ய!!

**பொழிப்புரை:**

மண்ணை ஜலத்திலும், அதை தேஜஸ்ஸிலும் அதை வாயுவிலும், அதை ஆகாசத்திலும், அதையும் முக்குணப்ரக்ருதியுடன் எல்லையற்ற பரிபூர்ணனான என் ஸ்வரூபத்தில் முறையே ப்ரவிலாபனம் (லயசிந்தனை) செய்து மிஞ்சியிருக்கும் அகண்டமான ஞானானந்த ஸ்வரூபத்தை அனுபவித்துக் கொண்டு இங்கு நான் களிப்புற்றிருக்கிறேன்.

41) அஞ்ஞான தன்னிரஸனே மயி போத ரூபே
ஸ்யாதாம் கதம் திமிர தத் விரதீ இவார்கே!
பந்தஸ்ச மோக்ஷ இதி கல்பனம் யஸத்யம்
ப்ராந்த்யைவ பாத்ய கிலஸாக்ஷிணி நித்யமுக்தே!!

**பொழிப்புரை:**

எவ்வாறு சூரியனிடத்தில் இருட்டும், அதை நீக்குதலும் இருக்க இயலாதோ அவ்வாறே அக்ஞானமும் அதை விலக்குவதும், சித்ஸ்வரூப னான என்னிடத்தில் எவ்வாறு இருக்க முடியும்?. பந்தம் என்றும் மோக்ஷம் என்றும் கற்பிப்பதும், உண்மையல்ல. மனமயக்கத்தால் நித்யமுக்தனாயும் எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியுமாயிருக்கும் ஸ்வரூபத்தில் அவை தோற்றமாத்ரமாய் (மட்டுமே) விளங்குகின்றன.

42) ஆரப்த கர்மணிச போகத ஏவ நஷ்டே
ப்ராணாதயோபி மம நோத்க்ரமிதும் ஸமர்தா:
தப்தாக்னி நிஷ்ட ஜதுவன்மயி பூர்ண போதே
லீநா பவந்தி நபுநர் ஜனனா திகம் ஸ்யாத்!

**பொழிப்புரை:**

ப்ராரப்த கர்மமும் அனுபவிக்கப்பட்டு கழிந்த பின் என்னுடைய ப்ராணன்கள் முதலியவைகளும் வெளிக்கிளம்பும் திறமையற்ற வையாகவே இருக்கின்றன. எரியும் அக்னியில் இடப்பட்ட மெழுகு போல பூர்ண அகண்ட போத வடிவினனாகிய என்னிடத்தில் அவை (ஸூக்ஷ்மசரீரம்) லீனமடைகின்றன. மீண்டும் பிறப்பு முதலியவை கிடையாது.

43) ஆம்னாய மஸ்தக ஸுஸம்ஸ்க்ருதவை பவோஹம்
 வ்யோம்னோ பி பூர்ண தமமூர்திரஹம் ஸ்திதோ ஹம்!
ஸர்வாலயோ ஹமஹமாத்யவ பாஸகோ ஹம்
 வாகாத்ய கோசர ஸதோதித ஸௌக்ய கோஹம்!!

**பொழிப்புரை:**

நான் வேதங்களின் மகுடங்களாகிய உபநிஷத்துக்களால் (சிரவண, மனன, நிதித்யாஸனங்களினால்) நன்கு தூய்மையாக்கப்பட்ட சிறப்பு வாய்ந்தவன். நான் ஆகாயத்தைக் காட்டிலும் மிக மேன்மையான பரிபூர்ண வடிவினன். நான் நிலை பெற்றவன். எல்லாவற்றிற்கும் இருப்பிடமே நான். 'நான்' முதலிய எல்லா அந்தக் கரண விருத்திகளையும் பிராகாசிக்கச் செய்பவன் நான். வாக்கு முதலியவைகளுக்கு எட்டாதவனும், தானாய் என்றும் விளங்கும் ஆனந்த ஸ்வரூபம் நான்.

**இங்ஙனம் ஸ்ரீஸதா சிவேந்த்ர ஸ்ரஸ்வதியினால் இயற்றப்பெற்ற ஆத்ம வித்யா விலாஸம் முற்றுப்பெற்றது.**

**ஸ்ரீ ஸதாசிவ ப்ரம்மேந்திராள் அருளியவைகள்**

1. ஸ்ரீ சதாசிவ ப்ரம்மேந்திராள் கீர்த்தனங்கள் – 23
2. பிரம்ம சூத்ர விர்த்தி (அல்லது) பிரம்ம தத்துவ பிரகாசிகா
3. யோக சுதாகரா
4. உபநிஷத் வியாக்யானம் (அல்லது) கைவல்ய அமிர்த பிந்து
5. சித்தாந்த கல்பவல்லி
6. கேசுரவாளி
7. அத்வைத ரச மஞ்சரி
8. ஆத்மா நுசந்தானம் – 36 சுலோகம்
9. ஆத்ம வித்ய விலாசம் 1–43 சுலோகம்
10. ஆத்ம வித்ய விலாசம் 2–62 சுலோகம்
11. சிவமானஸ பூஜா
12. தக்ஷிணாமூர்த்தி தியானம் – 45 சுலோகம்
13. ஸ்வப் நோதிதம் – 23 சுலோகம்
14. நவமணி மாலா – 10 சுலோகம்
15. நவ வர்ண ரத்னமாலா – 13 சுலோகம்
16. சிவாநுபூதி பிரகாசிகா – 11 சுலோகம்
17. மநோ நியமனம்
18. பிரம்மம் சுகர்யா

உ

ஓம் ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மணே நம:

## ஸ்ரீஸதா சிவ ப்ரஹ்மேந்திரர் அருளிய ஆத்ம வித்யா விலாஸம்

**சிந்.முத்3–ரித–கர–கமலம் சிந்தித ப4க்தேஷ்ட–த3ம் 1விமலம்!**
**கு3ரு–வரம் ஆத்3யம் கஞ்சன நிரவதி4 காநந்த3 நிர்ப4ரம் வந்தே3!!**

**விளக்கம்:**

சின் முத்திரையோடுள்ள தாமரைக் கையையுடையவராயும், பக்தர்கள் நினைத்த இஷ்டங்களைக் கொடுப்பவராயும், எல்லையில்லாத ஆனந்தத்தால் நிரம்பியவராயும், பரிசுத்தராயுமுள்ள (ஒப்பற்ற) ஒரு ஆதி குருச் சிரேஷ்டரை நமஸ்கரிக்கிறேன்.

1) **வட–தரு–நிகட–நிவாஸம்**
**படுதர–விஜ்ஞாந–முத்3ரித–கராப்3ஜம்!**
**கஞ்சன தே3ஸிகம் ஆத்யம்**
**கைவல்யாநந்த3 கந்த3லம் வந்தே3!!**

**விளக்கம்:**

ஆலமரத்தின் அருகிலே குடியிருப்பவரும், சிறந்த ஞானத்தை மிகவும் தெளிவாக விளக்கும் முத்திரையோடுள்ள தாமரைக் கையை யுடையவரும், கலப்பற்ற தான (கைவல்யமான) ஆனந்தத்தின் கொழுந்தாயிருப்பவருமான (ஒப்பற்ற) ஆதி குருச் சிரேஷ்டரை நமஸ்கரிக்கிறேன்.

2) **நிரவதி4–ஸம்ஸ்ரு1 தி–நீரதி4**
**நிபதித–ஜந–தாரண ஸ்பு2 ரந்–நௌகாம்!**
**பர–மத–பே4த3ந–கு4டி காம்**
**பரமசிவேந்த்ரார்ய–பாது3காம் நௌமி!!**

**விளக்கம்:**

எல்லையில்லாத ஸம்ஸாரமாகிய சமுத்திரத்தில் விழுந்த ஜனங்களைக் கரையிற் கொண்டு சேர்ப்பதற்கு அதிவேகமாக செல்லும் படகாகவும், பிறமதங்களை (காலால் எற்றி) பிளந்தெறியும் கணைக்கால் போலவுமுள்ள பரம சிவேந்த்ரர்களுடைய பாதுகையை நமஸ்கரிக்கிறேன்.

3) **தே3ஸிக–பரமஸிவேந்த்3ரா–**
**தே3ஸ–வஸோத்3பு3த்3த–தி3வ்ய–மஹிமா (அ) ஹம்!**
**ஸ்வாத்மநி விஸ்ராந்தி–க்ரு1தே**
**ஸரஸம் ப்ரஸ்தௌமி கிஞ்சித்3 இத3ம்!!**

**விளக்கம்:**

(என்) குரு பரம சிவேந்த்ரர்களுடைய உபதேச பலத்தாலே பிரகாசமடைந்த திவ்விய மஹிமையையுடைய நான் ஆத்மாவிலே அமைதியாயிருப்பதற்காக சுவையுடையதான ஏதோ ஒருவகையான இதை (ஸ்துதியாக) சொல்லத் தொடங்குகிறேன்.

4) நிருபம-நித்ய-நீரிஹோ
நிஷ்கல-நிர்மாய-நிர்கு³ணாகார:!
விக³லித.ஸர்வ-விகல்ப:
ஸ⁶த்³தே⁴ா பு³த்³த⁴ஸ்-சகாஸ்தி பரமாத்மா!!

**விளக்கம்:**

ஒப்பற்றதும் பற்றற்றதுமான நித்தியப்பொருளாய் பகுதிகளாகப் பிரிக்க வொண்ணாததாய் மாயையின் சம்பந்த மொன்று மில்லாத தாய் குணங்களின் ஸம்பந்தமொன்று மில்லாத வடிவையுடையதுமான பரமாத்மா எல்லாவித மாறுபாடுகளும் (விகல்பங்களும்) அற்றதாய் பரிசுத்தமானதாய் விழித்துக் கொண்டிருப்பதாய் (ஞான ஸ்வருபமாய்) விளங்குகின்றது.

5) ஸ்வாவித்³யைக-நிப³த்³த⁴:
குர்வந் கர்மாணி முஹ்யமாந: ஸந்!
தை³வாத்³விதூ⁴த-ப³ந்த⁴:
ஸ்வாத்ம-ஜ்ஞாநாந்-முநிர்-ஜயதி!!

**விளக்கம்:**

தன்னுடைய அவித்தையால் மட்டுமே கட்டுண்டவனாய், காரியங்களை செய்து கொண்டும் அறிவு மயங்கியும் இருந்து கொண்டே (தற்செயலாக) அதிர்ஷ்ட வசத்தால் தன் ஆத்மாவைப் பற்றிய அறிவால் பற்றுகள் நீங்கியவனாக முனிவன் விளங்குகிறான்.

6) மாயா-வஸேன ஸுப் தோ
மத்⁴யே பஸ்யந் ஸஹஸ்ரஸ: ஸ்வப்நாந்!
தே³ஸிக-வச:ப்ரபு³த்³தே⁴ா
தீ³வ்யத்யா நந்த³-வாரிதெ⁴ள கோ (அ) பி!!

**விளக்கம்:**

மாயையின் சக்தியால் தூங்குகிறவனாகி (தூக்கத்தின்) இடையிலே கனாக்களை ஆயிரக்கணக்காக கண்டு (பின்பு) குருவினுடைய வார்த்தைகளால் விழித்துக்கொண்டவனாகி ஆனந்த ஸாகரத்தில் (ஒப்பற்ற) ஒருவன் திளைத்து இன்புறுகிறான்.

7) ப்ராக்ருத-ப4ாவம் அபாஸ்ய
ஸ்வீக்ருத-நிஜ-ரூப-ஸச்சித3ா நந்த3:
கு3ரு-வர-கருணா (அ) பாங்க3ாத்3
கெ3ளரவம் ஆஸாத்3ய மாத்3யதி ப்ராஜ்ஞ:!!

**விளக்கம்:**

சிறந்த குருமூர்த்திகளின் கருணை கொண்ட கடைக்கண் பார்வையால் பிரக்ருதி ஸம்பந்தமான தன்மையை உதறியெறிந்து (தன்ஸ்வரூபமான) உண்மை இயல்பான ஸச்சிதானந்தத்தை தனதாக்கிக் கொண்டவனாகி மேன்மையை அடைந்து அறிவாளி களிப்புறுகிறான்.

8) ஸ்ரீ2கு3ரு-க்ரு1பயா ஸச்சித்
ஸுக2 -நிஜ-ரூபே நிமக்3ந-தீ4ர் மெளநீ!
விஹரதி கஸ்சந விபு3த4:
ஸாந்தாஹந்தோ நிதாந்த-முதி3தாந்த:!!

**விளக்கம்:**

(ஒப்பற்ற) ஒரு ஞானி ஸ்ரீ குருவின் கிருபையால் ஸத்தும், சித்தும், ஆனந்தமுமான தன் ஸ்வரூபத்திலே ஆழ்ந்த புத்தியையுடைய மௌனியாகி அகம்பாவ மற்றவனாய் மிகவும் களிப்புற்ற மனதையுடையவனாய் விளையாடுகிறான்.

9) குரு-வர-கருணா-லஹரீ-
வ்யதிகர-ப4ர-ஸீதல-ஸ்வாந்த:!
ரமதே யதி-வர-ஏகோ
நிருபம-ஸுக-ஸீமநி ஸ்வைரம்!!

**விளக்கம்:**

ஒப்பற்ற சிறந்த சன்னியாசி சிறந்த குருவின் கருணையாகிய பேரலைக்கு அருகே இருப்பதால் அதிக குளிர்ச்சி பெற்ற மனதையுடையவனாய் தன்னிச்சைபடி ஒப்பற்ற ஆனந்தத்தின் (எல்லைப்புறத்திலே) பெருக்கிலே இன்புறுகிறான்.

10) ஸ்ரீதே3ஸிக-வர-கருணா
ரவி-கர-ஸம போஹிதாந்தர-த்4 வாந்த:!
விஹரந் மஸ்கரி-வர்யோ
நிரவதி 4 காநந்த 3-நீரத4ாவாஸ்தே!!

**விளக்கம்:**

ஸ்ரீகுரு சிரேஷ்டரின் கருணையாகிய சூரிய கிரணங்களால் (அக

இருளை) அஞ்ஞானத்தைப் போக்கிக் கொண்டவரான சிறந்த சன்னியாசி எல்லையற்றதான ஆனந்த ஸாகரத்திலே விளையாடிக்கொண்டு இருக்கிறான்.

11) ஜநி-விபரீத-க்ரமதோ
பு$^3$த்$^3$த$^4$யா ப்ரவிலாப்ய பஞ்ச-பூ$^4$தாநி!
பரிஸிஷ்டம் ஆத்ம-தத்த்வம்
பஸ்யந்ந்-ஆஸ்தேமுநி: ஸாந்த:!!

**விளக்கம்:**

ஐந்து பூதங்களையும் (அவை) தோன்றிய முறைக்கு மாறான முறையிலே (அதாவது ஆகாசம், வாயு, தேஜஸ், நீர், மண் என்றதற்கு மாறான மண், நீர், தேஜஸ், வாயு, ஆகாசம் என்ற முறையிலே) புத்தியைக் கொண்டு ஒடுங்கச் செய்து எஞ்சியதான ஆத்ம பொருளை நோக்கியவனாய் ஒரு முனிவன் சாந்த முடையவனாக இருக்கிறான்.

12) ஜக$^3$த்$^3$ அகி$^2$லம் இத$^3$ம் அஸாரம்$^1$
மாயிகம் ஏவேதி மநஸி மந்வாந:!!
ப்ர்யடதி பாடி தாஸ:
ப்ரக$^3$லித-மத$^3$-மாந-மத்ஸர: கோ (அ)பி!!

**விளக்கம்:**

இந்த ஜகத் முழுவதும் ஸாரமற்றது. மாயையால் ஆனதேயாகும் என்று மனதிலே கருதுவோனாகி ஆசை நொறுங்கிப் பொடிந்து போனதால் ஆசையற்றவனும் செருக்கு,அபிமானம், பொறாமை இவை தன்னிடத் திலிருந்து வழுவப் பெற்றவனுமாகி ஒப்பற்ற ஒருவன் திரிகிறான்.

13) நாத்மநி கிஞ்சிந்-மாயா
தத் கார்யம் வா(அ)ஸ்தி வஸ்துதோ விமலே!
இதி நிஸ்சயவாந் அந்தர்-
ஹ்ருஷ்யத்யாநந்த$^3$-நிர்ப$^4$ரோ யோகீ$^3$!!

**விளக்கம்:**

பரிசுத்தமான ஆத்மாவாகிய தன்னிடத்திலே மாயையெனும் அல்லது கொஞ்சமும் மாயையின் காரியமேனும் உண்மையில் இல்லை என்று உறுதி கொண்டவனாய், ஆனந்தம் நிரம்பியவனாய், யோகியானவன் உள்ளத்திற் களிப்புறுகிறான்.

14) த்வம்-அஹம்-அபி$^4$-மாந-ஹீநோ
மோதி$^3$த-நாநா-ஜநா சார:!!

விஹரதி ப$^{3}$ாலவத்$^{3}$ ஏகோ
விமல-ஸுக$^{2}$ாம் பே$^{4}$ா -நிதெ$^{4}$ளமக்$^{3}$நு:!!

**விளக்கம்:**

நீ நான் என்னும் அபிமானமில்லாதவனாய் ஜனங்களின் பல்வேறு நடத்தைகளிலும் இன்புறுவோனாய் பரிசுத்தமான ஆனந்த ஸாகரத்திலே மூழ்கியவனாய் சிறு பிள்ளையைப் போல ஒருவன் விளையாடுகிறான்.

15) அவதூ$^{4}$த-கர்ம-ஜாலோ
ஜட $^{3}$-ப $^{3}$தி $^{4}$ராந்தே$^{4}$ாபம: கோ (அ) பி!
ஆத்மாராமோயதிரா
டடவீ-கோணேஷ் வடந்ந் ஆஸ்தே!!

**விளக்கம்:**

(தன்னிலேயே) ஆத்மாவிலேயே இன்புறுவோனாகிய ஒரு (ஒப்பற்ற) சன்னியாசிச் சிரேஷ்டன் கர்மாக்களாகிய வலைகளினின்றும் (பந்தங்களினின்றும்) நீங்கியவனாய் அறிவீனனும், செவிடனும், குருடனுமான ஒருவனைப் போன்றவனாய் காட்டு மூலைகளிலே திரிந்து கொண்டிருக்கிறான்.

16) ஸாந்த்யா த்$^{3}$ரு டே$^{4}$ாப கூ$^{3}$ட$^{4}$:
ஸாந்த-ஸமஸ்தாந்ய-வேத$^{3}$நோத$^{3}$ார:
ரமதே ரஸஜ்ஞ ஏகோ
ரம்யே ஸ்வாநந்த$^{3}$-பர்யங்கே!!

**விளக்கம்:**

இன்பமளிப்பதான தன்னுடையதான ஆனந்த மயமான பள்ளியிலே மற்ற எல்லாவுணர்ச்சிகளும் அற்றுத் தெளிந்தவனான ஒப்பற்ற ஒரு ரஸஜ்ஞன் (இன்பச் சுவையறிந்தவன்) மனச்சாந்தியாலே இறுகத் தழுவப் பெற்றவனாய் இன்புறுகிறான்.

17) உந்மூலித-விஷ யாரி:
ஸ்வீக்ருத-வைராக்$^{3}$ய-ஸர்வஸ்வ:!
ஸவாத் மாநந்த$^{3}$-மஹிம்நி
ஸ்வாராஜ்யே (அ) ஸ்மிந் விராஜதேயதிராட்!!

**விளக்கம்:**

சன்னியாசிகளுக்கு மன்னன் (சிறந்த சன்னியாசி), இந்திரிய சுகங்களாகிய பகைவர்களை வேரோடு களைந்தவனாய் வைராக்கிய மென்னும் சொத்தையெல்லாம் தன்னதாக்கிக் கொண்டவனாய் தன் ஆத்மாவாகிய ஆனந்தத்தின் பெருமையென்னும் இந்த ஸ்வராஜ்யத்தில்

சிறப்புற்று விளங்குகிறான்.

விஷயம் என்பது இந்திரிய உணர்ச்சியையும், தேசத்தையும் குறிக்கும். அரசன் நாட்டிலுள்ள பகைவரை வென்று வேற்றரசர்களின் சொத்துக்களை யெல்லாம் தன்னுடையதாக்கிக் கொண்டு ராஜ்யாதிகாரத்திற் பெருமையுடன் விளங்குவது போல யதிச்ரேஷ்டனும் விளங்குகிறான் என்பது கருத்து.

18) ஸவிதர்யபி ஸீத-ருசௌ சந்த்[3]ரே
தீக்ஷ்ணே (அ)ப்யதே[4]ர வஹ்ந்யக்[3] ஹெள!
மாயிகம்இத[3]ம் இதி ஜாநந்
ஜீவந் முக்தோ ந விஸ்மயீ ப[4]வதி!!

**விளக்கம்:**

சூரியன் குளிர்ந்த கிரணங்களையுடையனாயினும், சந்திரன் கொடியவனாயினும் தீ கீழ் நோக்கி கொழுந்து விட்டெழுந்தாலும் இது மாயையால் ஆனது என்று அறிந்தவனாகி ஜீவன் முக்தன் (உயிரோடுள்ள போதே மோக்ஷத்தை யடைந்தவன்) ஆச்சரியங்கொண்டவனாக இருப்பதில்லை.

19) அஜ்ஞாந-வைரி-விஜயீ
ப்ரஜ்ஞா-மாதங்க[3]-மஸ்தகாருட[4]:!
விஹரதி ஸம்[1]யமி. ராஜ:
ஸமரஸ-ஸு[6]க[2]-த[4]ாம்நி ஸர்வதோ ரம்யே!!

**விளக்கம்:**

பேரறிவு (ப்ரஜ்ஞை) என்னும் யானையின் பிடரியிலேறிக் கொண்டு அறியாமையாகிய பகைவனை வென்றவனாக துறவி ராஜன் எல்லா வகைகளிலும் இன்பந்தருவதான (ஸமரஸம்) யாதொரு பேதமுமில்லாத இன்பமான பிரதேசத்திலே இன்புறுகிறான்.

20) ஸாந்தாஹங்க்ரு[1]தி-தோ[3]ஷ:
ஸு[6]ஸமாஹித மாநஸ: கோ(அ) பி!
பூர்ணேந்து[3]-ஸிஸிர-ப[4]ாவோ
ராஜத்யாநந்த[3]-ஸத்ய-சித்[3]-ரஸிக:!!

**விளக்கம்:**

அஹங்காரமென்னும் தோஷம் அற்றவனாயும் நன்கு அமைந்த மனமுடையவனாயும், முழுமதிபோன்று குளிர்ந்த எண்ணங்களையுடைய வனாயும் ஸச்சிதானந்த பொருளாகி இன்புறும் ஒப்பற்ற ஒருவன் விளங்குகிறான்.

21) திஷ்ட$^{2}$ந் பரத்ர த$^{4}$ாம் நி
ஸ்வீய-ஸுக$^{2}$ாஸ்வாத$^{3}$-பர-வஸ: கஸ்சித்!
க்வாபி த்$^{4}$யாயதி குஹசித்$^{3}$
க$^{3}$ாயதி குத்ராபி ந்ருத்யதி ஸ்வைரம்!!

<u>**விளக்கம்:**</u>

வேற்றுலகிலே ஓரிடத்திலே இருந்து கொண்டு தன்னுடையதான (ஆத்மாவின்) ஆனந்தத்தை நுகர்வதிலே ஈடுபட்டவனாய் (ஒப்பற்ற) ஒருவன் தன்னிச்சைப்படி எங்கேனும் மனஞ்செலுத்துகிறான். எங்கேனும் பாடுகிறான். எங்கேனும் ஆடுகிறான்.

22) அக்$^{3}$ரு ஹீதாக$^{4}$-கலங்க:
ப்ரஸமித-ஸங்கல்ப-விப்$^{4}$ரம: ப்ராஜ்ஞ:!
ந்யக் க்ரு$^{1}$த-கார்ய கலாப
ஸ்-திஷ்ட$^{2}$த்யா பூர்ண ஸீமநி க்வாபி!!

<u>**விளக்கம்:**</u>

பாபமென்னும் மருவை (களங்கத்தைக்) கொள்ளாதவனாய் (ஸங்கல்பங்களால்) எண்ணங்களால் உண்டாகும் குழப்பங்கள் முற்றும் அற்றவனாய் காரியத்தொகுதிகளை யெல்லாம் அவமதித்து விலக்கியவனாயுள்ள பேரறிவாளி எங்கேயோ எங்கும் நிறைந்த செல்வத்தில் நிலை பெற்றிருக்கிறான்.

23) சபலம்$^{1}$ மந:- குரங்க$^{3}$ம்
சாரு க்$^{3}$ரு ஹீத்வா விமர்ஸ -வாகு$^{3}$ ரயா!
நிக$^{3}$ மாரண்ய-விஹாரா
ஸாந்த: ஸேதே ஸ்வ-த$^{4}$ாம்நிகோ (அ)ப்யேக:!!

<u>**விளக்கம்:**</u>

ஒரு நிலையிலே நில்லாது திரிகின்ற மனமென்னும் மானை (விமர்சம்) ஆராய்ச்சி என்னும் வலையிலே அழகாக பிடித்தபின் வேதங்களென்னும் காடுகளிலே இன்பமாகத் திரிந்ததாலே களைப் புற்றவனான ஒப்பற்ற ஒருவன் தன்னுடைய இடத்திலேயே சாய்ந்து அமைதி பெறுகிறான்.

24) த$^{3}$ாருண-சித்த வ்யாக்$^{4}$ரம்$^{1}$
தீ$^{4}$ர-மந: கட்க -த$^{4}$ாரயா ஹத்வா!
அப$^{4}$யாரண்யே கோ (அ) பி
ஸ்வைர விஹாரி ஜயத் யேக:!!

<u>**விளக்கம்:**</u>

சித்த மென்னும் கொடும்புலியை தைர்யங்கொண்ட மனம்

என்னும் வாளின் முனையால் வெட்டியழித்து ஒப்பற்றவனான ஒருவன் அச்சமின்மை என்னும் காட்டிலே தன்னிஷ்டப்படி திரிந்து விளையாடிக்கொண்டு சிறந்து விளங்குகிறான்.

25) ஸஜ்–ஜந–ஹ்ருʼத$^{3}$ய: ஸரோஜோ
 ந்மீலந–கர–தீ$^{4}$ கர–ப்ரஸர:!
ஏகோ யதி–வர–பூஷா
 நிர்தே$^{3}$ாஷஸ்–சரதி சித்$^{3}$–க$^{3}$க$^{3}$நே!!

**விளக்கம்:**

நல்லோர்களின் இருதயங்கள் என்னும் தாமரைகளை மலரச் செய்யும் புத்திக் கதிர்களைப் பரப்புகிறவனாய் குற்றமற்றவனாய் 'சித்' என்னும் வானத்திலே துறவிகளுள் சிறந்தவனான சூரியன் தனித்து சஞ்சரிக்கிறான்.

26) கு–வலய–விகாஸ–காரணம்
 அஜ்ஞாந–த்$^{4}$ வாந்த–கௌமுதீ$^{3}$–ப்ரஜ்ஞ:!
ஶுத்$^{3}$தே$^{4}$ா முநீந்த்$^{3}$ர–சந்த்$^{3}$ர:
 ஶுர–ஸேவ்யே லஸதி விஷ்ணு–பதே$^{3}$!!

**விளக்கம்:**

குவளைகள் மலர்வதற்குக் காரணமாயும் (பூமண்டலம் முழுதும் மகிழ்வதற்குக் காரணமாயும்) அறியாமை என்னும் இருளைப் போக்கும் பேரறிவாகிய நிலவையுடையதாயும் (மேலும்) களங்கமற்றுத் தூயதாயுமுள்ள முனிச்சிரேஷ்டனாகிய சந்திரன் தேவர்கள் அடைவதற்கேற்ற தான (எங்கும் நிறைந்ததாக நாடப்பெறும் பரம்பொருளிலே) வானத்திலே விளங்குகிறான்.

27) ஸ்வாநந்த$^{3}$ாம் ரு$^{3}$த ஸேகைர்
 ஆந்தர–ஸந்தாப–ஸந்ததிம் ஸமயந்!
சித்ரம் அசஞ்சல–வ்ருʼத்திஸ்
 சித்$^{3}$–வ்யோமநி ப$^{4}$ாதி யோகி$^{3}$–வர்ய–க$^{4}$ந:!!

**விளக்கம்:**

தன்னுடைய ஆனந்த மயமான அமுதத்திவலைகளால், நீர்த்துளிகளால் இருதயத்திலே தொடர்ச்சியாக எழுகின்ற ஸந்தாபங்களை (மன எரிச்சல்களை) தணிவித்துக் கொண்டு சித் என்னும் வானத்திலே (சிதாகாசத்திலே) யோகிகளுட் சிறந்தவன் என்னும் மேகமானது அலையாமல் நிலைத்து நிற்பதாய் விளங்குகிறது, ஆச்சர்யம்!

28) ஸுமந:ஸௌரப⁴-மஞ்ஜுலே
ஸஞ்சார-நிவாரிதாகி²ல-ஸ்ராந்தி:
ஸம்¹யமி சாரு ஸமீரோ
விஹரத்யாநந்த³-ஸம்¹வித்³ ஆராமே!!

**விளக்கம்:**

துறவி என்னும் மென் காற்று மலர்களின் (பிரும்ம நிஷ்டர்களின்) தெய்வீக நறுமணங்கொண்டு சுகமாக வீசுவதாலே (எல்லோருடைய) எல்லாச் சிரமங்களையும் நீக்கிக்கொண்டு ஆனந்தமயமான ஸம்வித்ஜ்ஞான மென்னும் பூந்தோட்டத்திலே இன்புற்று உலாவுகிறது.

29) நி:ஸ்ரேயஸ-ஸரஸ-ப²லே
நிர்மல-விஜ்ஞாந-பல்லவ-மநோஜ்ஞே
வீத-ப⁴யே விபிந-தலே
யதி-ஸிதிகண்டே²ா விப⁴ா திகோ (அ)ப்யேக:!!

**விளக்கம்:**

ரஸம் (அமிர்தம்) நிறைந்ததான (மோக்ஷம்) (நிஸ்ரேயஸ்) என்னும் பழத்தையுடைய தாயும் விஜ்ஞானம் (பேரறிவு) என்னும் தூய தளிர்களால் மனதைக் கவர்வதாயும் பயம் முற்றும் நீங்கிய தாயுமுள்ள காட்டுப் பிரதேசத்தில் ஒப்பற்றதுறவியாகிய மயில் ஒன்று விளங்குகின்றது.

30) நி:ஸாரபு⁴வந-மரு-தலம்
உத்ஸார்யாநந்த³-ஸார-ரஸ-பூர்ணே!
வர-ஸரஸி சிந்-மயே (அ) ஸ்மிந்
பர-ஹம் ஸ: கோ (அ) பி தீ³வ் யதி ஸ்வைரம்!!

**விளக்கம்:**

ஸாரமற்றதான பூமியாகிய பாலை நிலத்தை விட்டகன்று ஆனந்த மயமான (அமிர்தத்தால்) நீரால் நிறைந்ததும் சித் ஆகியதுமான இந்த சிறந்த ஏரியிலே ஒப்பற்ற ஒரு சிறந்த ஹம்ஸமானது தன்னிச்சைப்படி விளையாடுகின்றது.

31) நிகி²லாக³ம-பல்லவிதே
நிக³ம- ஸிரஸ்-தந்த்ர-ஸீதலோத் ³யாநே!
மது⁴ரதர-மஞ்ஜு வாச:
கஜந்ந் ஆஸ்தே யதீந்த்³ர-கலகண்ட²:!!

**விளக்கம்:**

எல்லா வேதங்களும் துளிர்த்திருக்கின்றதான உபநிஷத்துக்களிலுள்ள உபாஸனைகளால் (தந்திரங்களால்) குளிர்ந்திருக்கும் பூஞ்சோலையிலே சன்னியாசிச் சிரேஷ்டனான குயிலானது மிக்க

இனிமையான அஞ்சொற்களை மிழற்றிக் (கூவிக்) கொண்டு இருக்கின்றது.

32) த$^3$ாரித–மோஹ மதே$^3$பே$^4$ா
துா$^3$ரீ–க்ருத–ஸகல–து$^3$ரித–ஸார்து$^3$ல:!
விபு$^3$தோத்தம–ஸிம்–ஹவரோ
விஹரத்யாநந்த$^3$–விதத காந்தாரே!!

__விளக்கம்:__

அஜ்ஞானம் என்னும் மதம் பிடித்த யானையை பிளந்தெறிந்து பாபங்கள் என்னும் புலிகளையெல்லாம் விரட்டியோட்டிய புத்திமான்களுட் சிறந்தவனான சீரிய சிங்கமானது ஆனந்தம் என்னும் அகன்ற காட்டிலே இன்புற்றுவிளையாடுகின்றது.

33) அஜ்ஞாந–ம்ரு$^1$க$^3$வரோஜ்ஜி$^2$த–
விஜ்ஞா நோத்துங்க$^3$–ஶ்ரு$^1$ங்க$^3$–ஸிக$^2$ரி–தலே!
மதி–ஸலில–சீதலாங்கே$^3$ா
யதி–மத$^3$–கலபே$^3$ா விராஜதே விஹரந்!!

__விளக்கம்:__

அறியாமை (அஜ்ஞானம்) என்னும் சிங்கத்தாலும் ஏற முடியாது என்று விடுக்கப்பெற்ற பேரறிவு (விஜ்ஞானம்) என்னும் உயர்ந்த கொடுமுடியின் உச்சிப்பாகத்திலே மனனம் என்னும் நீராலே குளிர்ந்த வுடலையுடைய துறவி என்னும் மதயானை விளையாடிக்கொண்டு விளங்குகிறது.

34) நாஸா (அ) ஞ்சல–நிஹிதாக்ஷோ
நாமாதி$^3$ப்$^4$யோ நிவர்தித–ஸ்வாந்த:!
தடிநீ–தடேஷு தத்த்வம்
த்யாயந்ந் ஆஸ்தேயதி: கோ(அ)பி!!

__விளக்கம்:__

ஒப்பற்ற ஒரு துறவி மூக்கு நுனியிலே பார்வையை வைத்தவனாய் பெயர் முதலானவற்றினின்றும் தன்னுடைய மனதை மீட்டுக் கொண்டவனாய் நதிக்கரைகளில் உண்மையை தியானித்துக் கொண்டு இருக்கின்றான்.

35) ஆஸா–வஸநோ மௌநீ
நைரா ஸ்யாலங்க் ருத: ஸாந்த:!
கர–தல–பி$^4$க்ஷா–பாத்ரஸ்–
தரு–தல–நிலயோ முநிர்–ஜயதி!!

**விளக்கம்:**

திக்குகளையே ஆடையாகவுடையவனாய் மனனஞ் செய்பவனாய் (ஒன்றும் பேசாமல் இருப்பவனாய்) பற்றின்மையால் அலங்கரிக்கப் பெற்றவனாய் அமைதியுற்றவனாய், உள்ளங்கையைப் பிச்சை வாங்கும் பாத்திரமாகக் கொண்டவனாய் மரத்தடியைக் குடியிருக்கும் இடமாகக் கொண்டவனான முனிவன் சிறந்து விளங்குகிறான்.

36) விஜந-நதீ$^{3}$-குஞ்ஜ-க்ரு $^{1}$ஹே
மஞ்ஜுல-புலிநைக-மஞ்ஜ$^{6}$தர-தல்பே!
ஶேதே கோ(அ) பி யதீந்த$^{3}$ர:
ஸம-ரஸ-ஸுக$^{2}$-போ$^{3}$த$^{4}$-வஸ்து-நிஸ்தந்த்$^{3}$ர:!!

**விளக்கம்:**

ஒரே சச்சிதானந்தமயமான பொருளாகி சிரமம் நீங்கியவனான ஒப்பற்ற ஒரு சன்னியாசிச் சிரேஷ்டன் ஆள் நடமாட்டமில்லாத ஆற்றங்கரைச் சோலையாகிய (புதராகிய) வீட்டிலே அழகான மணல் என்னும் மிக்க வசீகரமானதும் ஒப்பற்றதுமாகிய படுக்கையிலே படுத்துக் கொண்டிருக்கிறான்.

37) பூ$^{3}$-தல-ம்ரு$^{1}$து$^{3}$தர-ஶய்ய
ஶீதல-வாதைக-சாமர: ஶாந்த:!
ராகா-ஹிமகர-தீபோ
ராஜதி யதி-ராஜ-ஶேக$^{2}$ர: கோ(அ)பி!!

**விளக்கம்:**

தவராஜர்களுக்கு முதல்வனான ஒப்பற்ற ஒருவன் குளிர் காற்று என்பதையே ஒப்பற்ற சாமரமாகக் கொண்டும், பௌர்ணமிச் சந்திரனைத் தீபமாகக் கொண்டும், வெறுந்தரை என்றும் மிக மெதுவான மெத்தையிலே சாய்ந்து கொண்டும், அமைதியுற்றவனாய் விளங்குகிறான்.

38) விபுல-ஶிலா-தல-ப$^{2}$லகே
விமல-ஸரித்$^{3}$-வாரி-ப்ரிவ்ரு$^{1}$தோத$^{3}$ரே!
மந்த$^{3}$ம் $^{1}$மலயஜ-பவநே
வாதி ப்ரஸ்வபிதி கோ (அ)பியதி-ராஜ:!!

**விளக்கம்:**

நிர்மலமான ஆற்று நீராலே சூழப்பெற்று அழகாயுள்ள அகன்ற பாறையாகிய பலகையிலே தென்றலானது மெல்ல வீச ஒப்பற்ற வொரு சிறந்த துறவி நன்றாகத் தூங்குகிறான்.

39) ஆந்தரம் ஏகம் 1கிஞ்சித்

ஸந்ததம் அநுஸந்த3த4ந்-மஹா மௌநீ!

கர-புட-பி4க்ஷாம் அஸ்நந்ந்-

அடதி ஹிவித்2யாம்1 ஜட3ாக்ரு1தி: கோ (அ) பி!!

**விளக்கம்:**

ஏதோ ஒன்றை மனத்துள்ளே இடைவிடாமல் சிந்தித்துக் கொண்டும் பெரிய மௌனியாகிய உள்ளங்கையிலே (இடப்பெற்ற) பிக்ஷான்னத்தை உண்டும் அறிவில்லாத ஜடப் பொருளைப் போன்ற வடிவமுடையவனாய் தெருவில் ஒப்பற்ற ஒருவன் திரிகிறானன்றோ?

40) ப்ரவிலாப்ய ஜக3த்3 அஸேஷம்1

பரிஸிஷ்டாக2ண்ட3-வஸ்து-பரதந்த்ர:!

ப்ராஸ்நாதி கவலம் ஆஸ்யே

ப்ராப்தம் ப்ராரப்3த4-கர்மணா கோ (அ) பி!!

**விளக்கம்:**

ஜகத்து முழுவதையும் நன்றாக் கரைத்தொழித்து மீதியாயுள்ள முழுப்பொருளுக்கு வசப்பட்டவனான ஒப்பற்ற ஒருவன் கிடைத்த கவளத்தை (பிடிசோற்றை) பிராரப்த கர்மாவால் (பயன் கொடுக்கத் தொடங்கிய வினைப்பயனால்) வாயிலே இட்டு உண்கிறான்.

41) நிந்த3தி கிமபி ந யோகீ3

நந்த3தி நைவாபரம் 1கிமப்யந்த:!

சந்த3ந-ஸீதல-ஹ்ரு1த3ய:

கந்த3லிதா நந்த3-மந்த2ர: ஸ்வாஸ்தே!!

**விளக்கம்:**

யோகியானவன் மனத்துள் ஒன்றையேனும் நிந்திப்பது (இகழ்வது) இல்லை. வேறு ஒன்றையும் புகழ்வதும் இல்லை. சந்தனத்தைப் போன்ற குளிர்ந்த இருதயமுடையவனாய் ஆனந்தம் நிறைந்து ததும்புகின்றவனாய் அமர்ந்திருக்கிறான்.

42) ஸந்த்யஜ்ய ஸாஸ்த்ர-ஜாலம்1

ஸம்1வ்யவ ஹாரம் 1ச ஸ்ர்வதஸ்-த்யக்த்வா!

ஆஸ்ரித்ய பூர்ண-பத3வீம்

ஆஸ்தே நிஷ்கம்ப-தீ3பவ1த்3 யோகீ3!!

**விளக்கம்:**

சாஸ்திரக் குவியல்களை நன்றாக விட்டு விட்டு கடமையையும் முற்றிலும் துறந்து அசையாத சுடரையுடைய நந்தா விளக்கைப் போல யோகியானவன் நிறைந்த நிலையை அடைந்து இருக்கிறான்.

43) த்ரு1ண-பங்க-சர்சிதாங்க3ஸ்
த்ரு1ணம் இவ விஸ்வம் விலோகயந் யோகி3!
விஹரதி ரஹஸிவநாந்தே
விஜராமர-பூ4ம்நி-விஸ்ராந்த:!!

**விளக்கம்:**

புல்லாலும் சேற்றாலும் பூசப்பெற்ற அவயவங்களை யுடைவனாய் உலகமனைத்தையும் புல்லைப்போல நோக்கிக்கொண்டு காட்டுபுறத்திலே சிரமந்தீர்ந்து அமைதியுற்றவனாய் யோகியானவன் தனிமையிலே நரையும் மரணமும் இல்லாத பிரதேசத்திலே இன்பமாய் விளையாடுகிறான்.

44) பஸ்யதி கிமபிந ரூபம்1
ந வத3தி நஸ்ரு1ணோதி கிஞ்சித 3பி வசநம்!
திஷ்ட2தி நிருபம-பூ4மநி
நிஷ்ட2ாம் அவலம்ப்ய காஷ்ட வத்3யோகி3!!

**விளக்கம்:**

யோகியானவன் எந்த ரூபத்தையும் காண்பதில்லை. பேசுவதில்லை. எந்தப் பேச்சையும் காதாலே கேட்பதில்லை. (உவமையில்லாத) ஒப்பற்ற செல்வத்திலே (பிரதேசத்திலே) நிலை பெற்றிருப்பதை கைக்கொண்டு மரம்போல அசையாதிருக்கிறான்.

45) ஜாத்யபி4மாந-விஹீநோ
ஜந்துஷு ஸர்வத்ர பூர்ணதாம்1 பஸ்யந்
கூ3ட4ம்1 சரதி யதீந்த்3ரோ
மூட4வத்3 அகி2லாக3மார்த2-தத்த்வஜ்ஞ:!!

**விளக்கம்:**

தான் (பிறவி) என்ற அபிமானம் ஒன்றும் இல்லாதவனாய் எங்கும் (எல்லா) ஜந்துக்களிடத்திலும் நிறைந்த தன்மையை காண்பவனும் எல்லா (ஆகமங்களிலுமுள்ள) வேதங்களிலுமுள்ள உண்மைப்பொருளை அறிந்தவனான துறவிகளுட் சிறந்தோன் அறிவில்லாதவன் போல மறைந்து திரிகிறான்.

46) உபத4ாய ப3ாஹு-மூலம்1
பரித3யாகாஸம் அவநிம் ஆஸ்தீர்ய

ப்ரஸ்வபிதி விரதி வநிதாம்$^{1}$
பரிரப்$^{4}$யாநந்த$^{3}$– பரவஸ: கோ (அ) பி!!

**விளக்கம்:**

ஒப்பற்ற ஒருவன் அடித்தோளை தலையணையாகக் கொண்டு வானத்தை போர்வையாகக் கொண்டு தரையை மெத்தையாகக் கொண்டு விரக்தி என்னும் அழகியை தழுவிக் கொண்டு ஆனந்த பரவசனாய் நன்றாக நித்திரை கொள்கிறான்.

47) க$^{3}$த–பே$^{4}$த$^{3}$–வாஸ நாபி$^{4}$:
ஸ்வ–ப்ரஜ்ஞோத$^{3}$ார–வாரநாரீபி$^{4}$:!
ரமதே ஸஹயதிராஜஸ்
த்ரய்யந்தாந்த: புரே கோ (அ) பி!!

**விளக்கம்:**

ஒப்பற்ற ஒரு சிறந்த சன்னியாசி உபநிஷத்துக்கள் என்னும் அந்தப்புரத்திலே பேதவுணர்ச்சிகள் (ஆடைகள்) நீங்கியவர்களான தன் பேரறிவு என்னும் அழகிய மாதர்களோடு இன்புறுகிறான்.

48) வைராக்$^{3}$ய–விபுல–மார்க$^{3}$ம்$^{1}$
விஜ்ஞா நோத்$^{3}$த$^{3}$ாம–தீ$^{3}$பிகோத்$^{3}$தீ$^{3}$ப்தம்!
ஆருஹ்ய தத்த்வ–ஹர்ம்யம்$^{1}$
முக்த்யா ஸஹ மோத$^{3}$தே யதி–ராட்!!

**விளக்கம்:**

(வைராக்கியம்) பற்றின்மை என்னும் அகன்ற வழியையுடையதாய் பேரறிவு (விஞ்ஞானம்) என்னும் மிகச்சிறந்த தீபத்தாலே மிக்க ஒளிபெற்றதாயுமுள்ள உண்மையென்னும் உப்பரிகைக்கு ஏறிச்சென்று துறவிகளிற் சிறந்தவன் முக்தி (என்னும் பெண் மணி) யோடு இன்புறுகிறான்.

49) விஜந–தலோத்பல–மாலாம்$^{1}$
வநிதா–வைத்ரு$^{1}$ஷ்ண்ய கல்பவல்லீம்ச!
அபமாநாம் ரு$^{1}$த– கு$^{3}$டிகாம்
ஆத்ம–ஜ்ஞ: கோ (அ) பி க்$^{3}$ரு$^{3}$ஹ்ண ணாதி!!

**விளக்கம்:**

ஒப்பற்றவொரு ஆத்மஜ் ஞானி ஜன ஸஞ்சாரமில்லாத இடத்தில் (நிரையாக மலர்ந்த) நீலோத்பல மலர்களை ஜபமாலையாகவும் பெண் பாலாரிடத்தில் ஆசையற்றிருத்தலைக் கற்பகக் கொடியாகவும் (பிறர் செய்யும் அவமானத்தை) அகங்காரமற்றிருப்பதை அமிர்த குளிகையாகவும் ஏற்றுக்கொள்கிறான்.

50) ந நிஷேத4தி தே3ாஷ-தி4யா

குணா-பு3த்3த்4யா வாந கிஞ்சித்3 ஆத3த்தே!

ஆவித்3யகம் அகிலம் இதி

ஜ்ஞாத் வோத3ா ஸ்தேமுநி: கோ(அ)பி!!

**விளக்கம்:**

ஒப்பற்ற ஒரு முனிவன் குற்றம் என்ற எண்ணத்தால் (ஒன்றையும்) மறுப்பதில்லை. நல்லது என்ற எண்ணத்தால் ஒன்றையும் ஏற்றுக் கொள்வதில்லை. எல்லாம் அவித்தையால் ஆனது என்று அறிந்து (உதாஸீனமாக) பற்றற்றவனாக இருக்கிறான்.

51) பூ4தம்1 கிமபி நமநுதே

ப4ாவிச கிஞ்சிந்-நசிந்தயத் யந்த:!

பஸ்யதி நபுரோ வர்த்யபி

வஸ்து ஸமஸ்தார்த2-ஸம-ரஸ: கோ (அ) பி

**விளக்கம்:**

எல்லாப் பொருள்களிலுமுள்ள ஒரே தன்மையாக இன்பமேயாக விளங்கும் ஒப்பற்ற ஒருவன் சென்றதை கொஞ்சமும் மனதிலே சிந்திப்பதில்லை. வரப்போவதையும் கொஞ்சமும் சிந்திப்பதில்லை. தன்முன்னேயுள்ள வஸ்துவையும் காண்பதில்லை.

52) நிக்3ரு1 ஹீதாகி2ல கரணோ

நிர்ம்ரு-ஷ்டாஸேஷ-விஷயேஹ:!

த்ரு1ப்திம் அநுத்தம-ஸீமாம் 1ப்ராப்த:

பர்யடதி கோ (அ) பி யதி-வர்ய:!!

**விளக்கம்:**

ஒப்பற்றவொரு சன்னியாசிச் சிரேஷ்டன் எல்லாக் கரணங்களையும் (எல்லாச் செய்கைகளையும்) ஒடுக்கிக் கொண்டு இந்திரிய சுகங்களிலுள்ள ஆசைகள் முழுவதையும் அழித்து மேல் எல்லையில்லா ஆனந்தத்தை அடைந்தவனாய் எங்கும் திரிகிறான்.

53) ஸந்த்யஜதி நோபந்நம்1

நாஸம்பந்நம் 1ச வாஞ்ச2தி க்வாபி!

ஸ்வஸ் த2: ஸேதே யதிராட்3

ஆந்தரம் ஆநந்த3ம்! அநுப4வன்னேக:!!

**விளக்கம்:**

சன்னியாசிகளுக்கு மன்னன் கிடைத்ததை வேண்டாமென்று

மறுப்பதில்லை. கிடையாததைக் குறித்து எப்பொழுதுமே ஆசைப்படுவதும் இல்லை. தன் ஆத்மாவிலேயே நிலைபெற்று நின்று (மனத்துள் இருக்கும்) அடிப்படையான ஆனந்தத்தை அனுபவித்துக் கொண்டு ஒப்பற்றவனாக அமைதியுற்றிருக்கிறான்.

54) காமபி விமலாம்$^{1}$ பத$^{3}$வீம்
ஆஸாத்$^{3}$யா நந்த$^{3}$-ஸம் வித்$^{3}$-உந்நித்$^{3}$ ராம்!
ஆஸ்தே பி$^{4}$க்ஷ$^{6}$க ஏகோ
விஹரந் நிர்முக்த-ப$^{3}$ந்த$^{4}$ந: ஸ்வைரம்!!

**விளக்கம்:**

ஒப்பற்றவொரு சன்னியாசி மாசற்றதும் ஸம்வித் ஞானமும் ஆனந்தமும் மலர்ச்சியுடையதுமான ஒப்பற்றவொரு நிலைமையை அடைந்து கட்டுக்களினின்றும் விடுதலை பெற்றவனாய் தன்னிச்சைப்படி விளையாடிக் கொண்டு இருக்கிறான்.

55) வஸ்துந்யஸ் தமி தாகி$^{2}$ல.
விஸ்வ-விஹாரே விலீ நமநா:!
ராஜதி பராநபேக்ஷா
ராஜா (அ)கி$^{2}$ல-வித- ராக$^{3}$ணாம்!!

**விளக்கம்:**

பற்றற்றவர்கள் எல்லோரிலும், சிறந்தவன் எல்லா ஜகத்திலுமுள்ள லீலைகள் எல்லாம் நீங்கிப் போன (பரம்) பொருளிலே ஒடுங்கிய மனதையுடையவனாய் வேறொன்றும் வேண்டாதவனாய் (ஸ்வதந்திரனாய்) விளங்குகிறான்.

56) ஆசார்யா பாங்க$^{3}$-த்$^{3}$ரு$^{3}$ஸா
ஸமவாப்தாபார-ஸம்-வித$^{3}$-ஆகார:!!
ப்ரஸமித-ஸகல-விபே$^{4}$த$^{3}$:
பர-ஹம்$^{1}$ஸ: கஸ்சித்$^{3}$ ஆப$^{4}$ாதி!!

**விளக்கம்:**

ஒப்பற்ற வொருவன் குருவின் கடாக்ஷத்தால் எல்லையற்றதான ஸம்வித் ஞானத்தையே வடிவாகப் பெற்றவனாய் வேறுவேறான பேதங்களை எல்லாம் அறவே ஒழித்தவனாய் பரமஹம்ஸனாய் விளங்குகிறான்.

57) வர்ணாஸ்ரம-வ்யவஸ்த$^{2}$ாம்
உத்தீர்ய விதூ$^{4}$ய வித்$^{4}$யாதீ$^{3}$ந்!

பரீஸிஷ்யதே யதீந்த்³ர:
பரிபூர்ணாநந்த³-போ³த⁴-மாத்ரேண!!

**விளக்கம்:**

சன்னியாசிகளுட் சிறந்தவன் வர்ணங்கள் ஆச்ரமங்கள் இவற்றின் கட்டுப்பாடுகளை கடந்து (சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட) விதி முதலியவற்றை உதறியெறிந்து முற்றும் நிறைந்த ஆனந்தமும் அறிவுமேயாக (சிதானந்தம் மட்டுமேயாக) எஞ்சி நிற்கிறான்.

58) க்ஷயம் உபநீய ஸமஸ்தம்¹
கர்ம ப்ராரப்³த⁴ம் உபபு⁴ஜ்ய!
ப்ரவிக³லித-தே³ஹ-ப³ந்த⁴:
ப்ராஜ் ஞோ ப்³ரஹ்மைவ கேவலம் ப⁴வதி!!

**விளக்கம்:**

பேரறிவாளி ப்ராரப்த வினையை அனுபவித்து (ஸஞ்சிதம், ஆகாமி, ப்ராரப்தம் ஆகிய) எல்லாவினைகளையும் அழிந்து போகும்படி செய்து சரீரத்தோடுள்ள பந்தம் (கட்டு) நழுவி யொழியப் பெற்றவனாய் (துணித்து) சுத்த பிரும்மமாகவே ஆகிறான்.

59) ஸ்திமிதம் அநந்தம் அநாத்³யம்¹
ஸந்ததம் ஆ நந்த³-போ³த⁴-க⁴நம்!
அவிகல்பம் ஆத்³யம் ஏகம்¹
ஸந்-மாத்ரம்¹ வித்³யதே கிமபி!!

**விளக்கம்:**

ஒப்பற்ற ஒன்று அமைதியுடையதாய் ஆதியில்லாததாய் முடிவில்லாததாய், எப்பொழுதும் ஒரே ஞானமும் ஆனந்தமு மாயிருப்பதாய், மாறுபாடு இல்லாததாய் ஆதிப்பொருளாய் ஸத் மாத்திரமேயாகிய ஒன்றாய் விளங்குகின்றது.

60) அக்ஷரம் அஜரம் அஜாதம்¹
ஸுக்ஷ்மதராபூர்வ-ஸ்ʼத்³த⁴-விஜ்ஞாநம்!
ப்ரக³லித-ஸர்வ-க்லேஸம்¹
பர-தத்த்வம்¹ வர்ததே கிமபி!!

**விளக்கம்:**

ஒப்பற்ற ஒரு சிறந்த உண்மைப் பொருளானது அழிவில்லாத தாயும் மூப்பு இல்லாததாயும் பிறப்பு இல்லாததாயும் எல்லாத் துன்பங்களும் நழுவி யொழிந்ததாயுமுள்ள மிக நுண்ணியதும் கலப்பற்றதும்

(அபூர்வமும்) முன்பு என்பது இல்லாத ஆதிப் பொருளுமான பேரறிவாக இருக்கின்றது.

61) ஸுக²தரம் அமரம் அதூ³ரம்¹
ஸாரம்¹ ஸம்ஸார-வாரி தே⁴ஸ்-தீரம்!
ஸம-ரஸம்-அப⁴யம் அபாரம்¹
தத் கிஞ்சந வித்³யதே தத்த்வம்!!

**விளக்கம்:**

தத் என்னும் உண்மையானது பேரின்பமாயும் அழியாததாயும் தொலைவிலே இல்லாததாயும் (கிட்டியிருப்பதாயும்) ஸம்ஸார ஸாகரத்தின் அக்கரையாயும் ஸாரமாயும் (உட்பொருளாயும்) ஒரே (சுவையை) தன்மையுடையதாயும் எல்லையற்ற தாயும் (இரண்டற்றதால்) அச்சமில்லாததாயும் காணப்படுகின்றது.

62) அரஸம் அக³ந்த⁴ம் அரூபம்¹
விரஜஸ்கம் அஸத்த்வம் அதமஸ்கம்!
நிருபம-நிர்ப⁴ய-தத்த்வம்
தத் கிமபித்³ யோததே நித்யம்!!

**விளக்கம்:**

சுவை (என்னும் குணம்) இல்லாததும், மணம் இல்லாததும், வடிவமில்லாததும் ரஜோகுணம் (மாசு) இல்லாததும் ஸத்வ குணமில்லாததும், தமோ குணமில்லாததுமான தத் என்னும் (வேறு பொருள் ஒன்றும் இல்லாததால்) உவமையற்றதும் அச்சமற்றதுமான உண்மைப் பொருள்/ஏதோ) ஒப்பற்ற ஒன்று என்றுமுள்ளதாய் விளங்குகின்றது.

63) இதி கு³ரு-கருணா (அ) பாங்க³ாத்³
ஆர்யாபி⁴ர்-த்³வ்யதி⁴க-ஷஷ்டி-ஸங்க்²யாபி⁴:
நிரவத்³யாபி⁴ர்-அவோசம்
நிக³ம-ஸிரஸ்-தந்த்ர-ஸார-பூ⁴தார்த²ம்!!

**விளக்கம்:**

இவ்வாறு குருவின் கருணை நிரம்பியகடாக்ஷத்தாலே அறுபத்திரண்டு என்று கணக்குள்ளவையும் குற்றமற்றவையுமான ஆர்யா விருத்தத்திலமைந்த சுலோகங்களால் (சிறந்த சொற்களால்) உபநிஷத்துத் தந்திரங்களின் (உபாஸனா முறைகளின்) ஸாரமான பொருளைப்பற்றி பேசினேன்.

64) க³தி³தம் இமம் ஆத்ம-வித்³யா
விலாஸம் அனுவாஸரம்¹ ஸ்மரந் விபு³த⁴:!

பரிணத-பராத்ம-வித்[3]ய:
ப்ரபத்[3]யதே ஸபதி[3]பரமார்த[2]ம்!!

**விளக்கம்:**

(இப்படி) சொல்லப்பட்ட (ஆத்மாவாகிய அறிவின் அழகையுடையதான) ஆத்ம வித்ய விலாஸம் என்னும் இதை ஒவ்வொரு நாளும் ஸ்மரித்த அறிவாளி சிறந்த ஆத்ம ஞானத்தில் முதிர்ந்தவனாகி உடனேயே பரம் பொருளை அடைகிறான்.

65) பரமஶிவேந்த்[2]ர-ஶ்ரீ[2]குரு
ஶிஷ்யேணோத்த[2]ம் ஸத[3]ா ஶிவேந்த்[3]ரேண!
ரசிதேயம் ஆத்ம-வித்[3]யா-
விலாஸ-நாம் நீ க்ரு[1]தி: பூர்ணா!!

**விளக்கம்:**

இவ்வாறு ஸ்ரீ குரு பரமசிவேந்த்ரர்களின் சிஷ்யரான ஸதாசிவேந்த்ரரால் இயற்றப்பட்ட ஆத்ம வித்யா விலாஸம் என்னும் பெயரையுடைய இந்தச் செய்யுள் முற்றுப்பெற்றது.

## சதாசிவத்தின் ஸித்து

ஆங்கிலேய அதிகாரி ஒருவர் குடும்பத்துடன் குற்றால அருவியில் குளித்துக் கொண்டிருந்தார். அப்போது சதாசிவம் அருவிக்கு மேலே ஒரு பாறையில் அவதூதர் நிலையில் நின்று கொண்டிருந்தார். இதைக்கண்ட ஆங்கிலேய அதிகாரி அவதூதர் நிலையில் சதாசிவம் நிற்பதை கண்டு கோபமடைந்து துப்பாக்கியால் சுட்டு இருக்கிறார். ஆனால் சதாசிவம் நின்ற இடத்தில் புலி நின்று கொண்டிருந்தது. சிறிது நேரத்தில் அவர் நிற்பதை கண்டு மறுபடியும் சுட்டு இருக்கிறார். அப்போது புலி தோன்றி மறுபடியும் சதாசிவம் நின்று இருக்கிறார். இதனால் பயந்த அதிகாரி அருவியை விட்டு விட்டு சென்று இருக்கிறார்.

ஒரு சமயம் இத்தாலி நாட்டை சேர்ந்த அதிகாரி ராமநாதபுரம் செல்ல குதிரையில் பயணம் செய்துள்ளார். அப்போது சதாசிவம் அவதூதர் நிலையில் சாலை ஓரமாக நின்று கொண்டு இருந்திருக்கிறார். இதை கண்ணுற்ற இத்தாலியன் இந்தியர்கள் வறுமையின் காரணமாக இப்படி திரிகிறார்கள் என எண்ணியுள்ளார். எண்ணத்தை அறிந்த சதாசிவம் அடுத்த 20வது மைலில் காட்சி தந்துள்ளார். இவரை பார்த்து இது வேறு ஒருவர் என நினைக்க அடுத்த 20வது மைலில் மறுபடியும் காட்சி தந்துள்ளார். இத்தாலியன் நாம் தவறாக எண்ணி விட்டோம், இந்தியா மகான்கள் நிறைந்த நாடு என எண்ணியவுடன் சதாசிவம் மறைந்து விட்டார். சித்தர்கள் தேவைப்பட்டால் தவிர மற்ற நேரங்களில் ஸித்து வேலை செய்ய மாட்டார்கள். மேலே கூறிய இருவரும் நாடு திரும்பி இந்தியாவில் தங்கள் அனுபவம் பற்றி வரலாறு எழுதும்போது இவைகளை குறிப்பிட்டுள்ளார்கள்.

## ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்திராள் ஸித்துக்கள் சில...

சதாசிவம் மௌன விரதத்தை கடைப்பிடித்து சிவபெருமானை எண்ணியவாறு காடு மேடுகளில் அலைந்து கிடைத்த உணவை உண்டு வாழ ஆரம்பித்தார். ஒரு நாள் களைப்பு தீர வரப்பு ஒன்றில் தலை வைத்து படுத்து இருந்தார். அந்த வழியாகச் சென்ற பெண்கள் சதாசிவம் படுத்து இருப்பதை பார்த்து முற்றும் துறந்த சன்னியாசிக்கு படுக்க தலையணையாக வரப்பு தேவைப்படுகிறது என கேலி செய்துள்ளார்கள். இவர் மறுநாள் தலைக்கு எதுவும் இன்றி படுத்திருப்பதைக்கண்டு அதே பெண்கள் இந்த சாமியார் போகிறவர்கள் பேசுவதை கேட்பதுதான் வழக்கம்போலும் ஆண்டவனை சிந்திக்க மாட்டார் போல் தெரிகிறது என பேசிச் சென்றுள்ளார்கள். எனவே சதாசிவம் தன் நிலையை மேம்படுத்த வேண்டும் எனக்கருதி மக்கள் நடமாட்டம் இல்லாத இடங்களிலும், காடுகளிலும் திரிந்து கடும் தவம் செய்துள்ளார்.

ஒரு நாள் சுவாமியை கண்ட ஒருவர் தன்னிடம் இருந்த திராட்சை பழத்தை அவரிடம் கொடுத்துள்ளார். பழத்தை வாங்கிய சுவாமி சிறிது நேரம் கையில் வைத்திருந்து விட்டு, உனக்கு சர்க்கரை நோய் உள்ளது. எனவே நீயே சாப்பிடு எனக் கூறி கொடுத்து விட்டு சென்று விட்டார். உண்மையிலேயே சர்க்கரை நோயால் அவதிப்பட்ட இவர் சுவாமி கொடுத்த திராட்சையை உண்டபின் சர்க்கரை நோய் தீர்ந்ததை மற்றவர்களுக்கு தெரியப்படுத்தியதால் சுவாமியை பார்ப்பவர்கள் சுவாமியிடம் ஆசி பெற்று நலமாக வாழ்ந்துள்ளார்கள்.

தவ வலிமை பெருகப் பெருக சதாசிவம் அஷ்டமாசித்திகளும் கிடைக்கப் பெற்றார். மேலும் சுவாமி தன்னிலை மறந்து அவதூதர் நிலையில் திரிய ஆரம்பித்தார். சதாசிவம் ஒரே நேரத்தில் மூன்று இடங்களில் தோன்றி அதாவது திருச்செந்தூரில் பாம்பு கடித்து இறந்த மணப்பெண்ணை உயிர்ப்பித்தும், தஞ்சாவூர் அருகே கொதித்துக் கொண்டு இருந்த வெல்லப்பாகுவை தண்ணீர் அருந்துவது போல் கையால் மொண்டு குடித்தும், சிதம்பரத்தில் தரபாடித் திருவிழாவில் ஆடிப்பாடியும் அற்புதங்களை செய்துள்ளார்.

திருவிசைநல்லூர் அய்யாவாள் ஒரு அமாவாசை அன்று முன்னோர்களுக்கு திதி கொடுக்க எல்லா ஏற்பாடுகளையும் செய்து பிராமணர்கள் அனைவரையும் விருந்துக்கு அழைத்து இருந்தார்.

பூஜை ஆரம்பிக்கும் முன் காவேரியில் நீராடி விட்டு வர சென்றுள்ளார். அய்யாவாள் நீராடிவிட்டு வரும் வழியில் கீழ் ஜாதியை சேர்ந்த பிச்சைக்காரன் ஒருவன் பல நாள் உணவு அருந்தாததால் மயங்கி படுத்திருப்பதை கண்டுள்ளார். அய்யாவாள் எந்த வித தயக்கமும் இன்றி கருணை கூர்ந்து அந்த மனிதனை தன் இல்லத்திற்கு அழைத்து வந்து வீட்டிற்கு பின்புறம் அமரச்செய்து விருந்தினர்களுக்காக செய்த உயர்தர உணவை பரிமாறி அவன் சந்தோஷமாக உண்பதையே பார்த்துக்கொண்டு இருந்தார். அந்த மனிதன் மிக ஆர்வத்துடன் உணவை ருசித்து சாப்பிட்டதோடு அல்லாமல் மீதமான உணவை பொட்டலமாக கட்டி எடுத்து சென்றுள்ளான்.

விருந்திற்கு வந்திருந்த பிராமணர்கள் எல்லோரும் அய்யாவாள் நடந்து கொண்ட முறையை பார்த்து கோபம் கொண்டு கீழ் ஜாதி மனிதன் உண்டு மீதமான உணவை தாங்கள் உண்ண மாட்டோம் என்றும், இந்த மனிதனுக்கு உணவு அளித்ததால் அய்யாவாள் பெரும் பாவத்திற்கு ஆளாகி விட்டார் என்றும் இந்த பாவம் தீர கங்கை நதிக்கு சென்று ஸ்நானம் செய்ய வேண்டும் என கூறியுள்ளார்கள். ஆயிரம் மைல்களுக்கு அப்பால் உள்ள கங்கை நதிக்கு சென்று ஸ்நானம் செய்து வருவது எப்படி? அமாவாசை திதி கொடுப்பது எப்போது? என மனக்குழப்பத்துடன் ஆண்டவா இதற்கு ஒரு வழி காட்டமாட்டாயா என வேண்டியுள்ளார். அப்போது அய்யாவாள் வீட்டிலிருந்த ஸதாசிவ ப்ரம்மம் அங்கிருந்த கிணற்றை பார்க்க கிணற்றில் இருந்து எதிர்பாராதவிதமாக கங்கை நீர் பொங்கி வழிந்து தெருவெல்லாம் ஓட ஆரம்பித்தது. ஆறாக ஓடிய நீரில் கங்கை நதியில் வாழும் அத்தனை ஜந்துக்களும், மீன்களும், முதலைகளும் திருவிசைநல்லூர் தெருவில் ஓட அங்கிருந்த மக்கள் அனைவரும் ஆனந்தம் அடைந்து நீராடி மகிழ்ந்தார்கள். இவர்களோடு சதாசிவ ப்ரம்மம் ஜய துங்கதரங்கே! ஜய துங்கதரங்கே! கங்கா என்ற கீர்த்தனையை ஆடிப்பாடி தெருவில் மகிழ்ந்துள்ளார்.

சதாசிவ ப்ரம்மம் அவதூதர் நிலையில் காடு, மேடுகளில் அலைந்து கொண்டிருந்தபோது படிப்பறிவு இல்லாத பிரம்மச்சாரி ஒருவர் சுவாமியை பார்த்தவுடன் சாஷ்டாங்கமாக வணங்கி குருவாக ஏற்றுக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டார். சுவாமி தனக்கு பணிவிடை செய்ய எவரையும் அனுமதிப்பதில்லை. இருந்தாலும் பிரம்மச்சாரியின் அன்பிற்கு கட்டுப்பட்டு பணிவிடை செய்ய அனுமதித்தார். பிரம்மச்சாரியும் குருவின் குறிப்பறிந்து

சுவாமிக்கு வேண்டிய சேவைகளை பணிவுடன் செய்து வந்துள்ளார். ஒருசமயம் பிரம்மச்சாரி நான் ஸ்ரீரங்கநாதனை தரிசிக்க வேண்டும் என குருவிடம் கூறியுள்ளார். சதாசிவமும் பிரம்மச்சாரியை கண்கள் இரண்டையும் மூடிக்கொள்ளுமாறு கூறியுள்ளார். சிறிது நேரம் கழித்து பிரம்மச்சாரியை கண்களைத் திறக்க சொல்லி உள்ளார். பிரம்மச்சாரி கண்களை திறந்த உடன் திருச்சி ஸ்ரீரங்கநாதனுக்கு தீபாராதனை நடந்து கொண்டிருப்பதை கண்டு பேரானந்தம் கொண்டு தரிசனம் செய்துள்ளார். தரிசனம் பண்ணியவுடன் தன் பக்கத்தில் இருந்த சதாசிவ ப்ரமத்தை எங்கு தேடியும் காணவில்லை. பின் நெரூர் வந்தவுடன் சுவாமி அங்கு இருப்பதை கண்டு தரிசித்தார்.

பிரம்மச்சாரி தன் குருவான சதாசிவ ப்ரம்மத்திடம் வேதம் படிக்க ஆசையாக உள்ளது என கூறியுள்ளார். இதை அறிந்த சதாசிவம் பல தடவை பிரம்மச்சாரி தலையில் கைவைத்து தீட்சை கொடுத்து சரஸ்வதி தேவியை வேதம் கற்றுக்கொடுத்து ஆசீர்வதிக்க வேண்டும் என கேட்டுக்கொண்டார். சரஸ்வதி தேவியின் அருளாலும், சதாசிவத்தின் அருளாலும், சில நாட்களில் படிப்பறிவில்லாத பிரம்மச்சாரி வேதத்தில் சிறந்த அறிவுற்று பண்டிதராக வாழ்ந்து வந்துள்ளார். பிற்காலத்தில் இவருக்கு ஆகாச பூரண ராமலிங்க சாஸ்திரிகள் என்ற பட்டம் கிடைக்கப்பெற்று நெரூரில் பல காலம் வாழ்ந்து வந்துள்ளார்.

முஸ்லிம் மதத்தைச் சேர்ந்தவர்கள் எவராக இருந்தாலும் சிலைகளை வணங்காமல் தங்கள் மதத்தில் மகான்களாக வாழ்ந்தவர்களின் சமாதிகளில் தொழுவார்கள். தஞ்சாவூரில் வாழ்ந்த இரண்டு முஸ்லிம் சகோதரர்கள் சதாசிவ ப்ரம்மேந்திராள் பற்றி அறிந்து அவர் முகமது நபியால் அனுப்பப்பட்ட மகான் என கருதினார்கள். எனவே சதாசிவ ப்ரம்மேந்திராளை அடிக்கடி சந்தித்து ஆசிபெற்று அவரை நிர்வாண சாமியார் என அழைத்தார்கள். இவர்கள் அல்லாவை எப்படி தொழுவார்களோ அதுபோல் சதாசிவத்தையும் தொழுவார்கள். சதாசிவத்தால் வசியப்பட்ட இவர்கள் எந்தநேரமும் அவருடன் காலத்தை கழித்தார்கள். இவர்கள் இருவரும் பார்ப்பதற்கு சாதாரணமாக இருப்பார்கள். சதாசிவ ப்ரம்மேந்திராள் மேல்கொண்ட பக்தி வைராக்கியத்தால் சுவாமியின் அருள்பெற்று பெரிய மகான்களாக வாழ்ந்தார்கள். இவர்களை தேடிப்பார்க்க வரும் எல்லாமதத்தைச் சேர்ந்தவர்களுக்கும் ஆசி வழங்கி பெயர் பெற்றார்கள். இவர்களை இரட்டை மஸ்தான் என அழைப்பார்கள். அவர்கள் இறந்தபின் இருவருக்கும் ஒரே இடத்தில் சமாதி எழுப்பி இரட்டை மஸ்தான் சமாதி என அழைக்கப்பட்டு எல்லா மக்களாலும் தொழுகப் படுகிறார்கள்.

# ஸ்ரீ சதாசிவ ப்ரம்மேந்திராள் சமாதிகள்

ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திராள் இந்தியாவில் பல இடங்களில் சுற்றி மக்களுக்கு ஆசி வழங்கி விட்டு தமிழ்நாட்டில் தென் வடலாக ஓடும் காவேரி ஆற்றுக்கரையில் நெரூர் கிராமத்தருகில் ஜீவ சமாதியடைய முடிவெடுத்தார். நெரூர் பொதுமக்கள் முன்னிலையில் திருமூலர் எழுதியுள்ளது போல் சமாதி குகை அமைத்து சித்திரை மாதம் ஜேஷ்ட சுத்த தசமியன்று ஜீவசமாதி அடைந்தார். சதாசிவம், தான் சமாதியடையுமுன் தன்னுடைய சமாதிக்கு மேல் 8வது நாள் வில்வ மரச்செடி முளைக்கும் என்றும், 12வது நாள் ஒரு பிராமணாள் காசியிலிருந்து ஒரு பாணலிங்கம் கொண்டு வருவார் என்றும் அதை சமாதிக்கு கிழக்கே 12 அடி தள்ளி பிரதிஷ்டை செய்து வழிபட்டு வர வேண்டும் என கூறினார். சதாசிவம் நெரூரில் ஜீவசமாதியடைந்த அதே நாளில் சூட்சும சரீரமாகவும், காரண சரீரமாகவும், மானா மதுரை, கராச்சி என்ற இடங்களில் சமாதியடைந்தார்.

**நெரூர்:** ஸ்ரீ சதாசிவ பிரம்மம் சமாதியடைந்த உடன் புதுக்கோட்டையை ஆண்ட விஜயரகுநாத தொண்டைமான், சதாசிவம் கூறியதுபோல் பாணலிங்கத்தை பிரதிஷ்டை செய்து காசி விஸ்வநாதர் என பெயரிட்டு விசாலாட்சியையும் பிரதிஷ்டை செய்து ஆகம விதிப்படி கோவில் கட்டி கும்பாபிஷேகம் செய்து பொதுமக்களுக்காக அர்ப் பணித்தார். கோவில் பராமரிப்பிற்காக வேண்டிய பிராமணர் களை நியமித்து அவர்களுக்கு வேண்டிய வசதிகளையும், நிலங்களையும் தானமாக கொடுத்து பூஜைகள் நடைபெற ஏற்பாடு செய்தார்.

கோவில் ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில் கட்டியதாலும், சமாதி கரூரிலிருந்து வெகுதூரம் தள்ளியிருந்ததாலும் பொதுமக்கள் வரத்து குறைந்து சரிவர பூஜைகள் நடைபெறவில்லை. 1913ம் ஆண்டு ஒரு துறவி இலக்ஷார்ச்சனை சுவாமிகள் சதாசிவரின் ஆராதனையை சித்திரை மாதம் ஜேஷ்ட சுத்த தசமியன்று துவங்கி வைத்தார். அப்பெரியார் தொடங்கிய புனித தொண்டு ஆண்டு தோறும் சமாதியில் இலக்ஷார்ச்சனையும், நெரூர் அக்ரஹாரத்தில் சதாசிவர் ஆரா தனையும் நடைபெற்று அன்னதானமும் வழங்கப்படுகிறது. இதற்கென்று தனியாக ஒரு சபையை பக்தர்கள் ஏற்படுத்தியுள்ளார்கள்.

**மானாமதுரை:** வைகை ஆற்றுக்கரையிலுள்ள மானாமதுரை சிவன் கோவில் பின்புறம் ஸ்ரீ சதாசிவர் சமாதியுள்ளது. அதிஷ்டானம் மீதுள்ள கற்சிற்பத்தில் 1.காயத்ரி 2.காமதேனு 3.திரிசூலம் முதலியவை செதுக்கப்பட்டுள்ளன. வலது பக்கத்தில் லிங்கமும், இடது பக்கத்தில் ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரரின் உருவமும் இருக்கின்றன. இங்கும் ஆண்டு தோறும் சிறப்பு வழிபாடு நடந்து வருகின்றது.

**கராச்சி:** கராச்சியில் வசித்து வந்த தன் பக்தன் ஒருவனுக்கு காட்சி கொடுத்து சமாதியடைந்ததாக கூறப்படுகின்றது.

**ஓங்காரம்:** நர்மதா நதி கரையிலுள்ள ஓங்காரம் என்ற இடத்தில் ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திராள் வாழ்ந்ததாகவும், அங்கேயே கார்த்திகை மாதத்தில் சமாதியடைந்ததாகவும் கூறுகிறார்கள். சதாசிவர் ஓங்காரத்தில் வாழ்ந்த காலத்தில் கோபால குலத்தை சேர்ந்த ஒருவனுக்கு பெருங்குஷ்டத்தை, சுரணைவாய் திறக்க செய்து எச்சில் உமிழ்ந்து வியாதியை நிவர்த்தித்து அனுக்கிரகித்ததாகவும் ஒரு வரலாறு உண்டு. இந்த கோபால பரம்பரையினர் இப்பொழுதும் ஓங்காரத்தில் சமாதிக்கு கார்த்திகை மாதத்தில் சிறப்பு பூஜைகள் செய்கிறார்கள்.

**காசி:** காசியில் ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரர் சமாதி ஆகியிருப்பதாகவும், அங்கும் பூஜைகள் நடப்பதாகவும் அறியப்படுகிறது.

## திருக்கோயில் நடை திறக்கும் நேரம்

| | | |
|---|---|---|
| தினசரி | : | காலை 8.00 மணி முதல் 1.00 மணி வரை<br>மாலை 4.00 மணி முதல் 7.30 மணி வரை |
| பௌர்ணமி | : | காலை 7.00 மணி முதல் 1.30 மணி வரை<br>மாலை 3.30 மணி முதல் 7.30 மணி வரை |
| அமாவாசை | : | காலை 7.00 மணி முதல் 1.00 மணி வரை<br>மாலை 4.00 மணி முதல் 7.30 மணி வரை |

## பூஜை விபரங்கள்

இந்த கோயில் சித்தரின் ஜீவ சமாதியுடன் உள்ளதால் அதிஷ்டானத்திற்கும், சிவன் கோயிலுக்கும் ஒரு கால பூஜை தினசரி காலை 9.00 மணிக்குள் நடைபெறும்.

**அதிஷ்டானம் :**

**பௌர்ணமி பூஜை :** காலை 10.00 மணி முதல் 12.00 மணிக்குள்

**சிவன் கோவில் :**

1 ) **பௌர்ணமி பூஜை** : காலை 8.00 மணி முதல் 9.00 மணி வரை

2 ) **அமாவாசை பூஜை** : காலை 8.00 மணி முதல் 9.00 மணி வரை

3 ) **பிரதோஷம்** : மாலை 4.30 மணி முதல் 6.00 மணி வரை

4 ) **தேய்பிறை அஷ்டமி** : மாலை 4.30 மணி முதல் 6.00 மணி வரை

5 ) **சங்கடஹரசதுர்த்தி** : மாலை 6.00 மணி முதல் 6.30 மணி வரை

6 ) **கிருத்திகை** : மாலை 6.00 மணி முதல் 6.30 மணி வரை

7 ) **சஷ்டி** : மாலை 6.00 மணி முதல் 6.30 மணி வரை

## ஸ்ரீ சதாசிவ ப்ரம்மேந்திரருடன் சம்பந்தப்பட்ட இடங்களின் புகைப்படங்கள்

1.சதாசிவப்ரம்மேந்திராள் மந்திரம் எழுதிய மண்ணை புதுக்கோட்டை மன்னர் விஜயரகுநாத தொண்டைமான் பேழையில் வைக்கப்பட்டுள்ள மண்டபம். மந்திரம் எழுதிய மண் பேழையில் வைக்கப்பட்டுள்ளது.





2) மானா மதுரையில் உள்ள அதிஷ்டானம். அதன் மீதுள்ள கற்சிற்பத்தில் 1.காயத்ரி, 2.காமதேனு, 3.திரிசூலம் முதலியவை செதுக்கப்பட்டுள்ளன. வலது பக்கத்தில் லிங்கமும், இடது பக்கத்தில் ஸ்ரீ சதாசிவ ப்ரமேந்திரரின் உருவமும் இருக்கின்றன. அதே இடம் பின்பக்கத்து காட்சி. அவதூதராக ப்ரம்மேந்திரர் சித்தரிக்கப் பட்டுள்ளதைக் காணலாம்.



3) ஸ்ரீ சதாசிவப் பிரம்மேந்திராள் ஸ்ரீதர வெங்கடேச ஐயாவாள் இருவரும் திருவிசைநல்லூரில் படித்த பள்ளிக்கூடம்.



4) திருவிசைநல்லூர் ஸ்ரீதர ஐயாவாளின் வீட்டில் உள்ள கிணறு. கங்கை நீரை வழிய செய்து துங்க தரங்கே கங்கே ஜெய துங்கதரங்கே கங்கே என்ற பாடலை பாடினார். ஐயாவாள் மடம் என அழைக்கப்பட்டு அமாவாசையன்று இன்றும் பூஜிக்கப் படுகிறது.



ஸ்ரீ சதாசிவ ப்ரம்மேந்திரர் மண்ணில் ஒரு மந்திரத்தை எழுதி, விஜயரகுநாத தொண்டைமானுக்குக் கொடுக்கிறார். அவர் அதை பத்திரமாக இந்த மண்டபத்தில் வைத்துள்ளார்.



புதுக்கோட்டையிலுள்ள கோகர்ணேஸ்வரர் கோவிலில் ஒரு மண்டபத்தின் தூணில் உள்ள சதாசிவ ப்ரம்மேந்திரரின் உருவம்.





அதே மண்டபத்தில் வைக்கப்பட்டுள்ள அறிவிப்பு பலகை.

(கீழே கொடுக்கப்பட்டுள்ளது)

## ஸ்ரீ சதாசிவ ப்ரம்மேந்திரர்

இம்மஹான் சுமார் 250 ஆண்டுகளுக்கு முன்பு அவதரித்தவர். சிறுவயதில் திருவரங்குளம் காடுகளில் அன்ன ஆகாரமின்றி நிர்வாணமாக கடுந்தவம் புரிந்து அஷ்டமா சித்திகளைப் பெற்றவர். மௌனவிரதம் மேற்கொண்டிருக்கையில் கி.பி.1738ல் புதுக்கோட்டை ராஜா விஜயரகுநாத தொண்டைமான் அவர்களுக்கு மணலில் மந்திரத்தை எழுதி உபதேசம் செய்தார். அதுமுதல் இவர் ராஜகுடும்பத்தாரின் குரு. இவருடைய சமாதி நெரூரில் காவிரி கரையில் உள்ளது. இதற்கான பூஜை நைவேத்ய செலவுகளை புதுக்கோட்டை தேவஸ்தானம் செய்து வருகின்றன.

## ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திராள் பற்றி எழுதப்பட்டுள்ள நூல்கள்

1. ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திராள் சரிதம் என்ற தமிழ் புத்தகத்தை நெரூர் ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திராள் சபையோரால் எழுதி சதாசிவ பிரம்மேந்திராள் சேவா டிரஸ்ட் மூலமாக 1941ம் ஆண்டு வெளியிடப்பட்டது.

2. என்.கனகராஜ ஐயர் ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரர் விஜயம் என்ற 2000 பாடல்கள் கொண்ட நூலை இயற்றி 1942ம் ஆண்டு ஜூன் மாதம் 16ந் தேதி நெரூரில் மக்கள் முன்பாக தமிழில் அரங்கேற்றியுள்ளார். இதன் கையெழுத்து பிரதி சென்னை கீழ்திசை ஆவண நூலகத்தில் உள்ளது. வரிசை எண்.337 (Manuscript No.7797) கட்டு எண்.T.R.1607.

3. 1951ம் ஆண்டு ஸ்ரீ காம கோடி கோஸஸ்தானம் சென்னை அவர்களால் எழுதிய நூலில் சதாசிவம் அருளிய கீர்த்தனைகள், சிவமானசிக பூஜா, ஆத்ம வித்யாவிலாஸம் 65 சுலோகம் ஆகியவற்றிற்கு ஆங்கில விளக்கமும், சமஸ்கிருத வார்த்தைக்கு தமிழ் அர்த்தங்களும் எழுதி வெளியிட்டுள்ளார்கள்.

4. ஸ்ரீசதாசிவ பிரம்மேந்திராள் சமஸ்கிருதத்தில் எழுதிய யோக சுதாகரா என்ற புத்தகத்திற்கு R.சுப்பராயசர்மா அவர்கள் தமிழ் விளக்கத்துடன் நாதன் பிரிண்டிங் பிரஸ், சென்னை மூலமாக வெளியிட்டுள்ளார்.

5. ஸ்ரீசதாசிவ பிரம்மேந்திராள் சமஸ்கிருதத்தில் அருளிய யோக சுதாகரா என்ற புத்தகத்திற்கு S.கோதண்டராமன் அவர்களின் விளக்கத்தை கார்கோடக வயலூர் அறக்கட்டளை சென்னை மூலமாக 1993ம் ஆண்டு வெளியிடப்பட்டது.

6. ஸ்ரீகாமகோடி கோசஸ்தானம் சென்னை அவர்களால் 1958ம் ஆண்டு ஸ்ரீ சதாசிவம் அருளிய 1) நவமணிமாலா 2)ஆத்மானுஸந்தானம் 3)ஸ்வப்னோதிதம் 4)ஸ்வானுபூதி ப்ரகாஷிகா 5) ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி தியானம் 6) மனோனியமனம் 7)நவவர்ண ரத்னமாலா 8) ஆத்மா வித்யா விலாசம் என்ற புத்தகங்களை மைனர் ஒர்க்ஸ் ஆப் ஸ்ரீ சதாசிவ பிரேம்மேந்திராள் என ஒரே புத்தகமாக ஸ்ரீ வாணி விலாஸ் பிரஸ், ஸ்ரீரங்கம் மூலமாக வெளியிட்டு உள்ளார்கள்.

7. ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திராள் அருளிய ஆத்ம வித்யா விலாஸம் 43 சுலோகங்களுக்கு ஸ்ரீ ஞானானந்தா நிகேதன் அவர்களால் 1995ம் ஆண்டு திருக்கோவிலூர் தபோவனம் மூலமாக ஸ்ரீ பூஜ்ய ஸ்ரீ வித்யானந்த கிரிஸ்வாமிகளின் பொழிப்புரையுடனும், விளக்கத்துடனும் தமிழில் வெளியிடப்பட்டுள்ளது.

8. 1995ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 14ம் தேதியன்று கரூர் P.நாகராஜன் அவர்களால் ப்ரணவ ஸகஸ்ர நாமாவளி என்ற புத்தகம் சமஸ் கிருதத்திலும், தமிழிலும் மல்டிவிஸ்டா பிரைவேட் லிமிடெட், வேளச்சேரி, சென்னை அவர்கள் மூலமாக அச்சிடப்பட்டு வெளியானது.

9. ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரா சரித்திரம் என்ற புத்தகம் சுவாமி சதாசிவானந்தா அவர்களால் எழுதப்பட்டு கைலாச ஆசிரமம் நெரூர் அவர்களால் வெளியிடப்பட்டது.

10. 2000ம் ஆண்டு நெரூர் ஸ்ரீ சத்குரு, சதாசிவ பிரேம்மேந்திரா சேவா

டிரஸ்ட் Sri Sadasiva Brahmendra's Life History extracts teaching and reflections என்ற புத்தகத்தை கன்னடத்தில் M/s. SHANKARI INDUSTRIES ஆப்செட் பிரிண்டர்ஸ் No.19, BSK 3rd Stage, Bangalore 560085 அவர்களால் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.

11.2006ம் ஆண்டு நெரூர் ஸ்ரீ சத்குரு சதாசிவ பிரேம்மேந்திரா சேவா டிரஸ்ட் "Sri Sadasiva Brahmendra's Life History, Extracts Teaching and reflections என்ற புத்தகத்தை ஆங்கில விளக்கத்துடன் Sri T.P.Vinayaka Rao அவர்களால் எழுதப்பட்டு M/s.Value Works, Jayanagar, Bangalore அவர்களால் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.

12. 2006ம் ஆண்டு நெரூர் ஸ்ரீ சத்குரு சதாசிவ பிரேம் மேந்திரா சேவா டிரஸ்ட் "Sri Brahmendra's all the23 Kirthanas with Meaning in Kannada along with all the 13 Minor works Main text என்ற புத்தகத்தை Sri T.P.Vinayaka Rao அவர்களால் எழுதப்பட்டு M/s.Value works, Jayanagar, Bangalore அவர்களால் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.

13. 2009ம் ஆண்டு நெரூர் ஸ்ரீ சத்குரு சதாசிவ பிரேம்மேந்திரா சேவா டிரஸ்ட் All 23 Keethana's and all the 12 Minor Works main text only என்ற புத்தகத்தை சமஸ்கிருதத்தில் (Part 2 Books) Sri T.P.Vinayaka Rao அவர்களால் எழுதப்பட்டு M/s. Value works, Jayanagar, Bangalore அவர்களால் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.

14.2009ம் ஆண்டு ஸ்ரீ சத்குரு சதாசிவபிரேம்மேந்திரா சேவா டிரஸ்ட் நெரூர் All 23 Kirthana's main text in Sanskrit with Brief impact and reflection in English என்ற புத்தகத்தை Sri T.P.Vinayaka Raoல் எழுதப்பட்டு M/s.Value Works, Jayanagar, Bangalore அவர்களால் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.

15.2009ம் ஆண்டு ஸ்ரீ சத்குரு சதாசிவ பிரேம்மேந்திரா சேவா டிரஸ்ட் நெரூர் All 13 Minor Works-Main text in sanskrit with meanings in english என்ற புத்தகம் Sri T.P.Vinayaka Rao அவர்களால் எழுதப்பட்டு M/s.Value Works, Jayanagar, Bangalore அவர்களால் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.

16. 2011ம் ஆண்டு ஸ்ரீ சத்குரு சதாசிவ பிரேம்மேந்திரா சேவா டிரஸ்ட் நெரூர் Yoga Sudhakara with English impact என்ற புத்தகம் Sri T.P.Vinayaka Rao அவர்களால் எழுதப்பட்டு M/s.Value Works, Jayanagar, Bangalore அவர்களால் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.

17.2012ம் ஆண்டு நெரூர் ஸ்ரீ சதாசிவ ப்ரஹ்மேந்திராள் அருளிய 1 ) கீர்த்தனைகள் 2) சிவமானசிக பூஜா 3)ஆத்மவித்யா விலாசம் I+II ஆகிய புத்தகங்களை சமஸ்கிருதத்திலும், தமிழ் விளக்கத்துடனும் கணக்கன்பட்டி பெரியசாமி அவர்களால் தொகுக்கப்பட்டு M/s. Soorya Printers, Karur அவர்களால் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.

18. 2016ம் ஆண்டு நெரூர் ஸ்ரீ சதாசிவ ப்ரஹ்மேந்திராள் அருளிய 1)கீர்த்தனைகள், 2)மநோ நியமனம், 3)நவ வர்ண ரத்ன மாலா, 4)சர்வ பாபஹர மஹா பாபக்னம், 5)சிவமானஸீக பூஜா, 6)ஆத்ம வித்யா விலாஸம்-I, 7)ஆத்ம வித்யா விலாஸம்-II ஆகியவை ஓய்வுபெற்ற கரூர் வைஸ்யா வங்கி மேலாளர் திரு.K.பாலசுப்பிரமணியன் அவர்களால் சில பகுதிகள் தமிழாக்கம் செய்து M/s. Soorya Printers, Karur அவர்களால் 5ம் பதிப்பாக அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.



நெரூர் ஸ்ரீ சதாசிவ பரஹ்மேந்திரர்
அதிஷ்டானம்